# திருவே திருவின் உருவே
# ஸ்ரீ வேங்கடேச ஸஹஸ்ரநாமம்
# தமிழ் அர்த்தம்

வியட்நாம்வீடு சுந்தரம் .V

# பதிப்புரை

இருபத்தைந்து ஆண்டுகட்கும் மேலாக இடைவிடாது சினிமா, நாடகத்திற்கு கதை, வசனம் எழுதிக் கொண்டிருந்த திரு. வியட்நாம் வீடு சுந்தரத்தை 'எழுது, எழுது, இறைவனைப் பற்றி எழுது' என்று இயக்கி வைப்பவர் தவத்திரு சிவசங்கரா அவர்கள். அதன் பயனாகப் பிறந்ததே இந்த நூல் 'திருவே திருவின் உருவே.'

ஸ்ரீ நாராயணன் கிருதயுகத்தில் மச்ச, கூர்ம, வராக, நரசிம்ஹ, வாமனராகவும், திரேதாயுகத்தில் பரசுராம, ராமராகவும், துவாபர யுகத்தில் பலராம ஸ்ரீ கிருஷ்ணராகவும், அதையடுத்த கலியுகத்தில் பிரத்யட்ச தெய்வமாக ஸப்தகிரியில் ஸ்ரீ வேங்கடேசாய நம: என்ற சத்தத்தின் ஒலி வழிபாட்டுடன் காத்து ரட்சிப்பதே கடமையாக, கண்ணயராக் கடவுளாக நின்ற நிலையிலேயே எழுந்தருளியிருக்கின்றார்.

அறுபத்தி ஆறுகோடி தீர்த்தங்கள் கொண்ட புஷ்கரணி மிக விசேஷம். அகத்தியர், வசிஷ்டர், நாரதர், வியாசர், அத்திரி, வால்மீகி, சுகர், கொங்கணவர் இப்படி சிரேஷ்டமாக சொன்னதே திருமலை.

பெருமாள் தோத்திரப் பிரியர். நாமாவளியில் மயங்குபவர். அவரது அழகுகளை பெருமைகளை வர்ணித்தால் பிடிக்குமாம். அதை அடிப்படையாக கொண்டு பிறந்தே ஸ்ரீ வேங்கடேஸ ஆயிரம் நாமாவளி.

ஸ்ரீவேங்கடேசனின் ஆயிரம் நாமாவளியை, ஆயிரம் நாக்கு படைத்த ஆதிசேஷனை பஞ்சணையாகக் கொண்டவனின் சகஸ்ரநாமத்திற்கு பொருளை எழுத இந்நூலாசிரியருக்கு அந்த பரம்பொருளே அருள்புரிந்து துணை நின்றிருக்கிறார் என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது.

ராமாவதாரம் முடியும் போது பகவான் அனுமனைத் தன்னுடன் வைகுண்டம் வரும்படி அழைத்தார். ஆனால் அனுமன் அவருடன் செல்ல மறுத்துவிட்டார். இங்கு ராமனாகப் பார்த்துப் பழகிய என் கண்கள் வைகுண்டத்தில் பள்ளிகொண்ட பெருமாளாகப் பார்க்குமா? ராமன் ஆலிங்கனம் செய்து கொண்ட ஸ்பரிச சுகமுள்ள இந்த உடலைக் களைந்து அங்கு வர விரும்பவில்லை. இங்கேயே உங்கள் நினைவில் உங்கள் திருநாமம் எங்கெல்லாம் உச்சரிக்கப்படுகிறதோ, அங்கெல்லாம் அதைக் கேட்டபடி இருக்கவே விரும்புகிறேன் என்றாராம் சிரஞ்சீவி அனுமன். அதனால்தான் ராமாவதாரத்தில் ராமரின் காலடியிலிருந்த அனுமனை கிருஷ்ணாவதாரத்தில் தலைக்கு மேலுயர்த்தி கொடியில் வைத்து மதிப்பளித்தார் போன்ற விளக்க வரிகள் பக்தியின் பெருமையை பறைசாற்றும் வரிகள்.

புல்லாங்குழலின் தத்துவ விளக்கம் படிப்பவர்களைப் புல்லரிக்க வைக்கும்.

வேங்கடரமணா கோவிந்தா, சங்கடஹரணா கோவிந்தா ஸ்ரீநிவாசா கோவிந்தா ஜெய்பாலாஜி என்ற பக்தி கோஷத்தை முந்நூற்று அறுபத்தைந்து நாளும், இருபத்து நான்கு மணி நேரமும் அல்லும் பகலும் கேட்டுக் கொண்டு வந்தாரை வாழ்வளித்து உயர்வளிக்க வந்த தெய்வம் ஸ்ரீ வேங்கடேச வரதனின் ஆயிரம் நாமாவளியை நாமும் அனுதினமும் பாராயணம் செய்து அஷ்டலட்சுமியின் அரவணைப்பில் சகல ஐஸ்வர்யங்களையும் பெற்று வாழ்வோம் என்பது திண்ணம்.

இந்த சிறந்த பக்தி நூலை எழுதி நூலாக வெளியிட அனுமதி அளித்த தெய்வீக அருள்பெற்ற எழுத்தாளர் திரு. வியட்நாம் வீடு சுந்தரம் அவர்களுக்கும், இந்த பக்தி நூலைப் படித்து ஸ்ரீ வெங்கடேசப் பெருமானின் அருளைப் பெறப் போகும் வாசகர்களாகிய உங்களுக்கும் எங்கள் நன்றி.

— பதிப்பகத்தார்

யோகி ராம் சுரத்குமார் யோகி ராம் சுரத்குமார்

யோகி ராம் சுரத்குமார் ஜெயகுருராயா

ஹரசிவ சங்கர சிவஹரசங்கர

ஹரிஹர சங்கர சிவசிவசங்கர

# திருவே திருவின் உருவே

தொகுப்பாசிரியர்: வியட்நாம் வீடு சுந்தரம். இடைவிடாது இருபத்தைந்து ஆண்டுகட்கும் மேலாக சினிமா நாடகத்திற்கு கதைவசனமெழுதுமென்னை எழுது எழுது எழுதிக் கொண்டேயிருயென்று இறைவனைப் பற்றி எழுதும் இயந்திரமாக்கி இயக்கும் பிரேம செரூபி H.H. சிவசங்கராவுக்கு இந்நூல் சமர்ப்பணம்.

ராமனை எழுதும் போது யோகி ராம் சுரத்குமார் நினைவு வரும்.

கண்ணனை எழுதும் போது கவியரசு கண்ணதாசனின் நினைவு வரும்.

இறைவனைப் பற்றி எழுதும் ஒவ்வொரு எழுத்திலும் பிறவி ஞானஒளி H.H. சிவசங்கராவின் நினைவே வரும்.

எனது ஆன்மஞானம் ''அனுபவம்'' சொன்ன அரிச்சுவடி அடிச்சுவடுகளைப் பின்பற்றி அவர்கள் போன பாதையை தேடுகின்றேன். நான் மட்டுமல்ல. தேடுபவர் கிடைக்கப்படுவர். பெரும் புண்ணியம் பிறவிப்பிணித் தீர்ப்பதே. கடவுள் மனிதனை படைத்ததே தன்னைச் சொல்லத்தான். மனமும் உடலும் இணைந்தது மானுடம். ''மனிதன்'' என்ற கூட்டுக்குள் உயிர் என்ற நிலையெண்ணிப்பாருங்கள்.

மனித உடல் எலும்புகள் எனும் தடுப்பு கட்டைகளால் சூழப்பட்டு மற்றும் இண்டு இடுக்குகளில்லாமல் நரம்புகளால் வலை போல் பின்னப்பட்டு அதற்கு பாதுகாப்பாக ஒரே தோலால் உறை போடப்பட்ட கூடு. இந்த கூட்டில் குடியிருப்பது எது? ஆன்மப் பறவை. சிறைப்பட்டிருக்கும் பறவை நவதுவாரங்களில் ஒரு துவாரம் வழியாக ஐம்புலன்களென்ற கண்காணிப்பாளர்களை ஏமாற்றிவிட்டு ஒரு பேரொளியை நோக்கி, ஏதோ ஒரு சூனியத்தில் லயித்து வானில் பறக்கத்தான் போகிறது.

ஜனனமென்பது நிச்சயமென்றால், மரணமென்பதும் நிச்சயம். ஜனனமோ அவசரம். மரணமோ அவசியம். மரணமென்பது மனநடுக்கத்தை தருகிறதா? மரணத்தோடு மனிதன் மனிதகுலந் தோன்றிய நாள் முதல் மருத்துவம், தெய்வீகம், மெஞ்ஞானம், விஞ்ஞானம் என்று பலவிதமாக தப்பித்துக் கொள்ள போராடிக் கொண்டும் மரணம் வரும் நாளை தெரிந்து கொள்ள சோதிடம் என்பதை மானுடம் நாடிப் போவதையும் பார்க்கிறோம். முடிந்ததா மனிதனால்... போகுமிடமும் புரியாமல் போகும் வழியையும் உணராமல் போவதையெண்ணி மட்டும் கவலை கொள்கிறோம்.

நற்குணம் பேரொளியில் கூடும். நிர்குணமென்பது சூனியத்தில் கலக்குமென்பதே சிந்திக்க விரும்பாத இறப்பின் கலக்கம். இரவினில் வரும் உறக்கம் போலத்தானே இறப்பெனும் இனிய உறக்கம். அது மீளாத்துயில்.

நாம் நம் வீடுகளில் பிறந்து சில மாதங்களேயான சிசுக்களைப் பார்க்கிறோம். திடீரென சிரிக்கும். திடுக்கிட்டு அழும். அதற்கு யார் காரணம்? மாயாப்பூவைக் காட்டி மாயவன் காட்டும் விளையாட்டல்லவா அது. அந்த சிசுப்பருவம் முதல் நாலைந்து வயதாகி நினைவிற்கு வரும் வரை, நடந்த சம்பவங்களை நமக்கு எப்படி அறிய முடிகிறது. நமது வீட்டு முதியோர் சொல்கின்றனர். அதை யூகமாக உணர்கிறோம். வளர்ந்து யௌவன, வாலிபப் பருவத்தில்

நடப்பவைகளை பிரத்யட்சம், நிதர்சனம் என்று நம்புகின்றோம். அதற்கு பிறகு... நாம் இறந்த பின் நம்மைப் பற்றி நமக்கு நடந்ததைப் பற்றி நம் பிள்ளைகள் பேசப் போகின்றார்கள்.

பிறந்ததும் நடந்தவை மூதாதையாருக்குத் தெரியும். இறந்த பின் நடந்தவை சந்ததிக்குத் தெரியும். இடைப்பட்ட ஜீவித காலத்தில் அனைத்தனையும் யூகம், கேள்வி, பிரத்யட்சம், அனுபவம் என்ற விசாரங்களால் அறிகிறோம். அப்போது காலம் நேரம் தூரம் என்ற மூன்றுமே கணபரிமாணப் படுத்தப்பட்டு கணிதப்படுத்தப் படுகின்றது. நான்காவது பரிமாணமே Time விதி.

வேதங்களெனக் கூறப்படும் ரிக், யஜுர், சாம, அதர்வணமென்ற நான்கு மறைகளும், அதனைக் கையாளும் பிரமாணங்களும் அவைகளுக்கே பிரதானமான தெய்வங்களும், தேவதைகளும், அவற்றினை கையாள உபகரண, வியாகரண, மந்திர, மாந்திரீக, தந்திர, யந்திர, தத்துவங்களும் அத்தனைக்கும் இந்த யூகம், கேள்வி, அனுபவம், பிரத்யட்சம் என்ற மூன்று வழிமுறைகள் பொருந்தும்.

நாட்களும், கோட்களும், கோள பூகோள, சூர்ய, சந்திர, நட்சத்திர கணக்குகளும் பஞ்சாங்க கணிப்புகளும் அந்த நான்கின் அடிப்படையில் உருவானவைகளே. இந்த அத்தனை தத்துவங்களுக்கும் ஆதார அவதார புருஷன் ஸ்ரீ கிருஷ்ணனென்ற பரமாத்மாதான்.

அத்தனையும் உணர்ந்து, உணர்த்தும் ஞானி அந்த புருஷோத்தமன் ஒருவனே. அவனை 'கண்ணா' என அழைக்கின்றோம். கற்பனை செய்து பார்த்தால் அது காரணப் பெயராகத்தான் தோன்றுகிறது.

கண் + நா. கண்ணும் நாவும் சேர்ந்தால் 'கண்ணா'வாகிறது.

கண் ஒரு பொருளைப் பார்க்கிறது.

அந்த திருஷ்டிதான் கண்ணன்.

அதன் திருஷ்டாந்தமும் கண்ணன்.

'நா' ஒரு வகை ஒலி வடிவம் தருகிறது. அந்த சப்தமே கண்ணன்.

சப்தமும் கண்ணன். நிசப்தமும் கண்ணன். ஒலியும் கண்ணன், ஒளியும் அவன். ஒலியும் ஒளியும் அவனே. இடியும் அவன். மின்னலும் அவன். இடிமின்னல் மழை புயல் அத்தனையும் அவனே.

அவன் வாமனன். அவனே விஸ்வரூபி.

அவன் குழந்தை. அவனே மூத்தவன். அவன் மழலை. அவனே ஞானி. ஞானிகளின் ஞானி. யோகிகளின் யோகி.

பாராயணமும் அவன். நாராயணனும் அவன். நானும் அவன். சிம்ஹமும் அவன். தூணிலிமிருக்கும் துரும்பிலுமிருக்கும் நரசிம்மன் அவன்.

அலையிலும் இருப்பான். இலையிலும் இருப்பான். மலையிலும் இருப்பான். சிலையிலும் இருப்பான். கலையிலும் இருப்பான். எந்த நிலையிலும் இருப்பான். அதனால் தான் அவன் நாராயணன். ஆழியிலும் இருப்பான், தாழியிலும் இருப்பான், நாழியிலுமிருப்பான், தோழியிலுமிருப்பான்.

கண்ணனே குருநாதன்.

கண்ணனே கற்கும் பாடம்.

கண்ணனே வழி.

கண்ணனே வழிகாட்டி.

அச்சுதா, அனந்தா, கேசவா, மாதவா, யாதவா, யோகேஸ்வரா, வாசுதேவா... விளக்கே, விளக்கமே, எழுத்தே, கருத்தே, எழுத்தின் உயிரே, உயிரெழுத்தின் உரையே, உன்னை யாரென்று எவையெல்லாம் நீயென்று, எதிலெல்லாம் நீயென்று, பலவற்றில் சிலவற்றை எழுத்துக்களை அர்ச்சனை மலர்களாக்கி, உன்னை அட்சரங்களால் அர்ச்சிக்கிறேன். எழுத்துக்களின் ஆராதனையை ஏற்றுக் கொள்.

மாலே மணிவண்ணா... கண்ணா... வேதம் நீ.வேதமுணர்த்தும் போதம் நீ. யோகம் நீ, போகம் நீ, வேகம் நீ, பாகம் நீ, மோகம் நீ, ராகம் நீ, யாகம் நீ, தியாகமும் நீ.

ஊற்றும் நீ, காற்றும் நீ.

நாதம் நீ கீதம் நீ.

கடலும் நீ உடலும் நீ

நதியும் நீ, விதியும் நீ, நற்கதியும் நீ. வானம் நீ, தானம் நீ, தியானம் நீ, கானம் நீ, மோனம் நீ, ஞானம் நீ.

சத்தம் நீ, சித்தம் நீ, நித்தம் நீ, சுத்தம் நீ, தத்தம் நீ, ரத்தம் நீ, மொத்தம் நீ. நீரும் நீ, நிலமும் நீ, நித்திலமும் நீ. பேரும் நீ, ஊரும் நீ, பாரும் நீ, யாரும் நீ. மலர்வதும் நீ. உலர்வதும் நீ, புலர்வதும் நீ. வருவதும் நீ, தருவதும் நீ, பெறுவதும் நீ. மலரும் நீ, பொழுதும் நீ.

வேதகி நீ, வேகி நீ, விவேகி நீ.

சுதர்சனம் நீ, நிதர்சனம் நீ.

சிருஷ்டியும் நீ, திருஷ்டியும் நீ.

குழலும் நீ, கழலும் நீ, நிழலும் நீ.

தடையும் நீ, படையும் நீ, உடையும் நீ, விடையும் நீ, குடையும் நீ.

மூலம் நீ, ஸ்தூலம் நீ, கோலம் நீ, காலம் நீ, ஜாலம் நீ, ஞாலம் நீ, பாலம் நீ.

வாரணம்-நீ, தோரணம் நீ, காரணம் நீ.

காரியம் நீ, வீரியம் நீ.

கல்லும் நீ, சொல்லும் நீ, வில்லும் நீ, வெல்லும் நீ.

அமுதம் நீ, குமுதம் நீ.

பாணம் நீ, பாக்ஷாணம் நீ, பாசுரம் நீ.

சுருதியும் நீ, ஸ்மிருதியும் நீ.

அணுவும் நீ, கணுவும் நீ, மனுவும் நீ.

கரும்பும் நீ, இரும்பும் நீ, சூதும் நீ, தூதும் நீ.

விதையும் நீ, கதையும் நீ, சதையும் நீ, நீதி நீ, பாதி நீ, மீதி நீ, ஜோதி நீ.

கள்ளம் நீ, உள்ளம் நீ, வெள்ளம் நீ.

தத்துவம் நீ, மருத்துவம் நீ, மகத்துவம் நீ.

பசுவும் நீ, ருசுவும் நீ.

விந்தம் நீ, அந்தம் நீ, கிரந்தம் நீ, பந்தம் நீ.

பிரபந்தம் நீ, சொந்தம் நீ.

ராஜ்யம் நீ, பூஜ்யம் நீ.

கருமையின் பெருமையே தேரோட்டிய தெய்வமே வாழி.

பூஜ்யம் நீ (சூன்ய வெட்ட வெளி)

ஒன்று நீ (நீ மட்டுமே பரம்பொருள்)

இரண்டு நீ (ஹரி ஹரன். யோகம் போகம்)

மூன்று நீ (மூன்று காலம், மூன்று குணம், ஆக்கல் காத்தல் அழித்தல்)

நான்கு நீ (நான்கு வேதங்கள்)

ஐந்து நீ (ஐம்புலன்கள்)

ஆறு நீ (அறுசுவை, ஆறாவது அறிவு)

ஏழு நீ (ஸ்வரங்கள் ஏழு, நாட்கள் ஏழு, கடல்கள் ஏழு, மலைகள் ஏழு)

எட்டு நீ (திசைகள் எட்டு, சித்திகள் எட்டு)

ஒன்பது நீ (நவதுவாரம், நவரத்னம், நவகிரகம், நவராத்திரி)

பத்து நீ (தசாவதாரம்)

அறுபத்து மூன்று நீ (நாயன்மார் 63 பேர்)

நூற்றியெட்டு நீ (108 திருப்பதிகள்)

பாரதி ''கண்ணன் என் சேவகன்'' என்றார்.

எல்லாம் நீ. எல்லாவற்றுக்கும் நீ.

எல்லாவற்றிலும் நீ. எல்லாவற்றோடும் நீ.

எல்லாவற்றுக்கும் முன்பே நீ.

எல்லாவற்றுக்கும் பின்பும் நீ.

நீ மெய். நான் பொய்.

ஞானரதமே நின் திருவடி சதமே.

எனது நெஞ்சம் நின் திருவடிக்கமலம் தஞ்சம்.

நீயே சாஸ்வதம். நீயே சாஸ்திரம்.

சர்வம் கிருஷ்ணார்ப்பணம்.

சமஸ்தம் கிருஷ்ணார்ப்பணம்.

ஸ்ரீ கிருஷ்ண கோவிந்தமே சரணம்.

இதுதான் கீதை சொன்ன கண்ணனைக் குறித்து அர்ஜுனனுக்கு அச்சுதன் சொன்ன அந்த மொத்த கீதைப் பேருரையின் சாராம்சத்தை கிருஷ்ணனிடம் நான் சொல்வது.

கருவாய், உருவாய், திருவாய், வருவாய், ஹரியாய், தெளிவாய், கிரியாய், ஒளியாய், தெளிவாய், தெளிப்பாய், அளிப்பாய்.

தெரியாப் பொருளில் தெரியும் பொருளே.

மறையும் நீ, மறையும் நீ. நின் ஸ்ரீ பாதமே சரணம்.

மறையும் நீ, நரஸிம்ஹமாக தூணில் ஒளிந்து கொண்ட நீ தான்

மறையும் நீ; வேதமாகியிருக்கிறாய்.

மறையென்றால் வேதம் என்றொரு பொருளுமுண்டு.

தெரியாப் பொருளில் தெரியும் பொருளென்றால் 'வேத நாராயணன்' என அர்த்தம். மேற்சொன்ன ஒவ்வொரு 'நீ'யையும் வரிக்குள் புகுந்து ஊடுருவிப் பார்த்தால் வேத வியாக்னமே புரியும். அந்த கண்ணன் பெரியவன். சின்னவனாக நடிப்பவன். நாடகமும் அவன் தான். வேஷமும் அவன்தான்.

மாடுகளை மேய்ப்பது போல், மந்தைகளாகத் திரியும் மனிதர்களை மேய்ப்பவன் மேய்ப்பவனும் அவன். ஏய்ப்பவனும் அவன். ஓங்கி உலகளந்த உலகநாதன். உரலிலே கட்டப்பட்டானாம். கட்டப்பட்டது உரலிலா, இல்லை. கட்டுப்பட்டுது உரலிலா. இல்லையில்லை... அன்னை யசோதையின் விரலில். எண்ணத்தை கீதையால் தேய்த்தவன் எண்ணெய் தேய்த்துக் கொள்ள யசோதையை படாதபாடு படுத்துவானாம். கண்ணன் மாயா சொரூபி.

வேஷதாரி வேணுகோபாலன் வேங்கடத்து மலை மீது யுகயுகமாக நிற்பவன்.

பள்ளி கொண்ட ரங்கன் துள்ளி விளையாடிய படலந்தான் கிருஷ்ண லீலைகள். அந்தக் கண்ணனை (மனம்) வாடி அழைத்தாள் ராதா.

பாடி அழைத்தனர். மீராவும் ஆழ்வார்கள்.

கூடி அழைத்தனர் ரிஷிகளும், முனிவர்களும்.

ஓடி அழைத்தனர் கோபிகைகள்.

தேடி அழைத்தனர் பக்தர்கள்.

கண்ணை மூடி அழைத்தனர் தபஸ்விகள்.

கூப்பிட்டாலும் கரம் கூப்பிட்டாலும் கும்பிட்டாலும் ஊஞ்சலாடும் உத்தமன் ஓடி வருவான். மலையப்பன் நாடி வருவான். இயற்கையின் இயற்கையந்த இதயகமலவாசன். நீரின் நீர்மை. ஒளியின் சுடர். ஒலியின் எதிரொலி. கன்று மேய்க்கும் அந்த இடையன் கை கோலே செங்கோல்.

ரிஷிகேசன். உணர்வுகளின் தலைவன். மனுஷ்யன் ஐம்புலன்களின் உணர்வுகளுக்கு அடிமை. ஆனால் அந்த அமானுஷ்யன் அவைகளை வென்று கடந்தவன்.

உடலுணர்வுகள் இருக்கும் வரை பேரின்ப சுகத்தை அனுபவிக்க முடியாதென்பதை பாபிகளுக்கு புரியவைக்கவே கோபிகைகளோடு கூடிக் குலவிக் காட்டினான். புவிஈர்ப்புக்குட்பட்ட உலகத்தில் தர்மத்தை யுகதர்மமாக கூற வேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கேற்பட்டது. அதனால்தான் தனது கருத்தை, மனித வடிவில், மனித வடிவங்கொடுத்து, மனிதாபிமானமென்ற உட்பொருளுடன் சொல்கிறார் ஸ்ரீ கிருஷ்ணன். துவாபர யுகத்தில் நர, நாராயணனாக வாழ்ந்த இரண்டு ரிஷிகளாக, இரண்டு பட்க்ஷிகளாக, பிறகு கண்ணன், அர்ஜுனனாக அவதரித்தனர். கண்ணன் பரமாத்மா. காண்டீபன் ஜீவாத்மா. கண்ணன் உபதேசித்த தத்துவம் உபநிஷதம். பார்த்தசாரதியாக, தேரோட்டியாக குருக்ஷேத்திரத்தில் தர்மயுத்தமும், யுத்த தர்மமும், செய்து காரணம், காரியம் என்ற இரண்டையும் தனிப்படுத்தியும், ஒன்று படுத்தியும், காரணமில்லாமல் காரியமில்லை, காரண காரியங்களைச் செய்ய கருவியும் கர்த்தாவும் வேண்டும். காரியத்துக்கு பலாபலன்களும் காரணத்துக்கு ஒரு நிகழ்ச்சியும் உண்டு என்பதை விளக்க கருவியாய் பயன்பட்ட கர்த்தா கண்ணனே. கர்மாவென்ற கடமையை செய்ய ஒரு குரு, வழிகாட்டி, தலைவன், நண்பன், தெய்வம், பக்கபலமாக இருத்தல் அவசியம். அதுவே பரமாத்மா வென்ற தான் என்பதை தத்துவார்த்தமாக உணர்த்தியவன் கண்ணன்.

உணர்வுகளை மறந்து உள்ளுணர்வுகளை மதிக்கக் கற்றுக் கொள். உனக்கும் உலகுக்கும் ஒரு பவித்ரமான தற்காலிக பந்தம் உள்ளது. உன்னை யோகங்களால் தான் சுத்திகரித்துக் கொள்ள முடியும். மனதை ஒருநிலைப்படுத்துவது மாபெரும் ஆற்றலாகும் என்கிறான் கண்ணன். தனது மாபெரும் உபதேசத்தில் விஞ்ஞானம், மெய்ஞானம், அறிவு, ஆற்றல்,

வீரம், ராஜதந்திரம், மனோதர்மம், மனோதத்துவம் போன்ற அரிய விஷயங்களடங்கிய கீதோபதேசத்தை சொல்ல ஏன் யுத்த களத்தை தேர்ந்தெடுத்தான் கண்ணன்? அந்த கீதோபதேசத்தை சொல்ல கேட்க அர்ஜுனனை ஏன் தேர்ந்தெடுத்து அவனுக்கு மட்டும் சொன்னான்? அவனைக் குறிப்பாக தேர்ந்தெடுத்த நோக்கமென்ன? இப்படி தத்துவார்த்தமான தர்க்கவாத கேள்விக் கணைகளை வீசிப் பாருங்கள்.

பாரத யுத்தத்தை பொறுத்தவரை பாலுக்கும் காவல். பூனைக்கும் தோழன். கௌரவருக்கு படையைக் கொடுத்தான். பாண்டவர்க்கு தன்னை கொடுத்தான். இது எத்தனை பெரிய ராஜ தந்திரம். அரசியல் நோக்கம்.

பஞ்ச பாண்டவர்களில் மூத்தவர் தருமர். யுதிஷ்டரர். அவரே யோகி. ஞானி. அவருக்கெதற்காக கண்ணன் யோகத்தை போதிக்க வேண்டும். அந்த தர்மரின் ஒளியை பேரொளியாக்குவதில் பலனில்லை. அதோடு, கண்ணன் தான் சொன்னதைக் கேட்கும் ஒருவனை, ஏன், எதற்கு எனக் கேட்காமல் செயல்படும் ஒருவனைத் தேடினான். அப்படிப்பார்க்கும் போது தர்மரை அவன் தேர்ந்தெடுப்பது இயலாத விஷயம். சூதாடி வென்ற சூதினை சூதால் வெல்ல நினைத்தவன் கண்ணன். வைரத்தை வைரத்தால் அறுப்பவன். அதனால்தான் தருமரை கீதோபதேசம் செய்ய தேர்ந்தெடுக்கவில்லை.

அடுத்து பீமசேனன். அவனிடம் பலமிருந்தது. கண்ணனுக்கு தேவை கற்பூர மூளை. ராட்சஸ பலம் பொருந்திய பீமன். கண்டிப்புக்கும் ஆணைக்கும் கட்டுப்படுவது கடினம். அதனால் தான் பீமனை தேர்ந்தெடுக்கவில்லை. அடுத்து நகுலனும் சகாதேவனும் அவர்கள் கண்ணன் சொல்வதை விட அண்ணன் யுதிர்ஷ்டரர் வாக்கை வேத வாக்காகக் கேட்பவர்கள். சுயபுத்தி இயக்கமில்லாமல் தர்மர் சொன்ன கர்மாவை செய்பவர்கள். அதில் சகாதேவனோ சோதிடக்கலை வல்லுனன். போருடன் ஆருடம் பார்த்து விட்டால்... கண்ணன் சொல்வதை

விட கட்டங்களும் கிரகங்களும் சொல்வதை நம்பினால்... அதனால் தான் அந்த இருவரையும் கண்ணன் தேர்ந்தெடுக்கவில்லை

அர்ஜுனன் கண்ணனின் அத்யந்த நண்பன். அண்ணன் வாக்கை மதிப்பானே தவிர கண்ணன் வாக்கை கடைப்பிடிப்பான். அவர்களிருவரும் ஒருவருக்கொருவர் நன்கு புரிந்து கொண்டு பழகுபவர்கள்.

கண்ணனின் விவேகமும் காண்டீபனின் வேகமும் அன்னியோன்யமானவை. கண்ணன் வாக்கே தன் வாழ்க்கையெனக் கருதுபவன் விஜயன்.

கண்ணனின் சொல்லும் அர்ஜுனனின் வில்லும் சரியான ஜோடிப் பொருத்தமுள்ளவை. அர்ஜுனனென்ற கருவி மூலம் தானே கர்த்தாவாக கண்ணனுக்கு பூரண உரிமையுண்டு. அர்ஜுனன் தவ வலிமை பெற்றவன். போகங்களை அனுபவித்து, ஏக்கமில்லாமல் யோகத்தில் மனதினை ஒருநிலைப்படுத்தும் யோக்கியதையுடையவன். இப்படி பலதரப்பட்ட கணக்குகளை போட்டு கூட்டிக் கழித்து வகுத்து தான் கண்ணன் பார்த்தனுக்கு கீதையை சொன்னான்.

இதில் இன்னொரு உள்ளந்தரங்கமும் இருக்கிறது.

ஸ்மரணை யென்றால் உணர்வு எனப் பொருள். ஸ்ருதி யென்றால் கேள்வி ஞானத்தால் கேட்கப்படுவது. கேட்கப்பட்டதில் நினைவிலிருப்பதே ஸ்மிருதி. இந்த ஸ்ருதி, ஸ்மிருதி யென்ற இரண்டு தகுதியும் அர்ஜுனனுக்கு உண்டு. அவனுக்கு மனதை ஒருநிலைப்படுத்தி, ஒரு இலக்கை நோக்கி செயல்படும் ஆற்றல் உண்டு என்பது ஆதிகால குருகுலவாசத்தில் கண்ணன் பிரத்யட்சமாக அறிந்த உண்மை. அதனால்தான் அர்ஜுனனை உபதேசிக்க தேர்ந்தெடுத்தான்.

பிரம்மரகசியம், பரமரகசியம், தேவரகசியம் என்று மூன்று உண்டு. அதில் பரமாத்மாவின் ரகசியமான பரமரகசியமே கீதையின் உட்பொருள். கண்ணனாக மாடோட்டினான்.

கிருஷ்ணனாகத் தேரோட்டினான். அதற்கு முன் அவதாரத்தில் அவர் குரங்காட்டி. ஆமாம். ராமன் குரங்காட்டி. வானர சைன்யமென்ற குரங்குகளை ஆட்கொண்டவர்.

ராமாவதாரத்தில் அவர் தூதனாக பணி செய்து, தாஸானுதாஸனாக, அவர் பெயரையே மூச்சுக்கு மூச்சு ஸ்மரித்தபடி, அவர் சேவையே லட்சியமெனக் கொண்டவர் ஹனுமான். ராமனோடு இருந்த சமயம் அனுமனுக்கு சீதையை தேடவும், சீதையை மீட்க போரிடவும், அவர்களை இணைக்கவுமே வேலை சரியாக இருந்தது.

கண்ணனாக அர்ஜுனனுக்கு உபதேசித்தது போல ராமனாக அனுமனிடம் பேசவோ, உபதேசிக்கவோ அந்த அவதாரத்தில் பெருமானுக்கு அவகாசமில்லை.

ராமாவதாரம் முடியும் போது பகவான் அனுமனைத் தன்னுடன் வைகுண்டம் வரும்படி அழைத்தார். ஆனால் அனுமன் அவருடன் செல்ல மறுத்துவிட்டார்.

ராமனாக இங்கு உன்னைப் பார்த்துப் பழகிய என் கண்கள் வைகுண்டத்தில் பள்ளிகொண்ட பெருமாளாக பார்க்குமா? மனம் ஏற்குமா? ராமா, ராமா என இங்கு ஸ்மரித்து, அந்த ஸ்மரணையையே ஸ்வாசிக்கும் என்னால் உம்மைத் திருமாலாகப் பார்க்க மனம் ஒப்பாது. அது மட்டுமல்ல... ராமனாக நீங்கள் என்னை ஆலிங்கனம் செய்து கொண்ட ஸ்பரிச சுகமுள்ள இந்த உடலை களைந்து அங்கு வர விரும்பவில்லை. இங்கேயே, உங்கள் நினைவில், உங்கள் திருநாமம் எங்கெல்லாம் உச்சரிக்கப்படுகிறதோ, அங்கெல்லாம் அதைக்கேட்டபடி இருக்கவே விரும்புகிறேன் என்றாராம் அனுமன் சிரஞ்சீவி. தன் ஐம்புலன்களால் உணர்ந்த ராம இன்பத்தை விட்டுச் செல்ல விரும்பாத தாஸானுதாஸன்.

அதனால்தான் கிருஷ்ணாவதாரத்தில் அர்ஜுனன் எப்படியோ அப்படியே தனது ராமாவதார தூதன் அனுமனென்பதை சூசகமாக மனதில் கொண்டு தன்

தேர்க்கொடியில் அனுமனை சின்னமாகப் பொறித்தார் பரந்தாமன். ராமாவதாரத்தில் காலடியிலிருந்த அனுமனை கிருஷ்ணாவதாரத்தில் தலைக்கு மேலுயர்த்தி. கொடியில் வைத்து மதிப்பளித்தார்.

கீதோபதேசம் வெளித்தோற்றப்படி அர்ஜுனனுக்கும், மறைமுகமாக (Indirect) கொடியிலிருந்த அனுமனுக்கும் சொல்லப்பட்டது. அனுமனுக்கேன் சொல்ல வேண்டும்? ஜீவனோடு, பூமியில், காற்றிலும் கலந்து வாழும் அனுமனை கொடியில் பிம்ப ஆவாஹனம் செய்து இதே யோக நெறிமுறைகளைச் சொன்னது. அனுமன் யுகங்கள் உள்ளவரை இருப்பவன். அப்படி இருக்க யோகமார்க்கம் அனுமனுக்கே அதிமுக்யமென்று கூறினார்.

அதோடு மட்டுமல்லாமல், அவன் வாயுபுத்திரன். அவனுக்கு மூச்சடக்கும் சித்தயோகமான பிராணாயாமம் சுலபம். அவன் நைஷ்டிக பிரம்மச்சாரி. கலியுகம் முடியும் வரை கீதையின் போதனையிருப்பதற்கு கற்றுத்தந்து, கீதைக்கு காவலிருக்க அனுமனை தேர்ந்தெடுத்து அர்ஜுனன் கேட்கையில் நீயும் கேள் என யூகமாக அனுமனைக் கொடியில் வைத்தார்.

ஒன்றை இன்னொன்றோடு இணைத்து இரண்டிலும் ஒன்றோடு ஒன்றால் பலனைக் காண்பது (Permantation Combination) கண்ணனின் அனுபவ முறை.

காரணகாரிய கர்த்தாவான கிருஷ்ணன் தனது முன் அவதாரத்தில் தான் ராமனாக இருந்த போது உதவியவர்களை மறக்காமல் மதித்தவன் பரமாத்மா.

ராமனாகயிருந்த போது ஆதிசேஷன் அவர் தம்பி லக்ஷ்மணன். அவனை கிருஷ்ணனாக அவதரித்த போது அண்ணன் பலராமனாக்கி முன் பிறப்பில் நின்று செய்த சேவைக்கு அடுத்த பிறப்பில் அமர்த்தி பாதபூஜை செய்தார்.

இப்படி பலவித உதாரணங்களை சுட்டிக்காட்டி நான் வலியுறுத்த விரும்புவதெல்லாம் 'காரணகாரியமென்ற' கிருஷ்ணதத்துவத்தைத்தான். இன்ன காரணத்துக்காக இதைச் செய்தால் இப்படி நடக்கும் போது இது உதவும். (Taboos and tot tam)இது கணித முறை.

கண்ணன் ஒரு கணித மேதை. அவனுக்கு முதல் வகுப்பின் கூட்டல் கழித்தலும் தெரியும். மூன்றாம் வகுப்பின் பெருக்கல் வகுத்தலும் தெரியும். அடித்தல் திருத்தலில் ஆசான். அடித்து திருத்தாமல் எழுதுவதில் கணக்கன். ஜியோமிதி முறைப்படி வியூகம் வகுத்தவன். அதே சமயம் விஞ்ஞானியுங்கூட. பலன், பிரதிபலன் (Action, Re-Action) பலாபலன், நேரான, எதிரான (Negative, Positive) ரீதிகளும் தெரிந்தவன். குருக்ஷேத்ர யுத்தம் இந்த (Formula) சித்தாந்த அடிப்படையில் நடத்தப்பட்டதே.

வைரத்தை வைரத்தால் அறுக்க வேண்டும். தீயை தீயால் அணைக்க வேண்டும். தீமையை தீமையால், சூதினை சூதால், சூழ்ச்சியை சூழ்ச்சியால் ஜெயிக்க வேண்டும். இதுவே கண்ணனின் யுத்த தர்மம். அவனுக்கு யுத்த தர்மமும் தெரியும். யுக தர்மமும் தெரியும்.

அவன் எண்ணிக் கொடுப்பான். மனதில் எண்ணிக் கொடுப்பான். சொல்லிக் கொடுப்பான். அள்ளிக் கொடுப்பான். பின்னால் வரப்போவதை முன்கூட்டியே கணக்குப் போட்டு, கேட்க வைத்து, நேரம் வரும் போது கேட்டதைக் கேட்டபடி தருபவன் கேசவன்.

இதற்கொரு உதாரணத்தைக் கூறி விளக்குகின்றேன்.

''அழிய வேண்டியவர்கட்கு ஆள் பலம் தந்தான், அழிக்க வேண்டியவர்கட்கு ஆன்ம பலம் தந்தான்''

தருமனை நம்பினால் கருமம் ஒழியாதென்று கண்ணனுக்கல்லவா தெரியும். தர்மம் கர்மத்தை வலியதென்றெண்ணி அனுபவிக்கும். தர்மபுத்திரனுக்குத் தெரியாது. சூதாட்டம் தீது. சூழ்ச்சியென்று தெரிந்தும் ஏன்

ஆடினான். விதி வலிது. தப்பமுடியாதென்ற கருத்தால் தானே கர்மாவை வலிதில் ஏற்றுக் கொண்டான். அதனால் தான் கண்ணனென்ற 'ஞானம்' தர்மத்துக்கும், கர்மத்துக்கும் 'யோகத்தை' உபதேசித்தது. வேதங்கள் நான்கு. கண்ணன் ஓட்டிய ரதத்தின் வெள்ளைக் குதிரைகள் நான்கும் அந்த நான்கு வேதங்களே.

நான்கு வேதங்களை குதிரைகளாக்கி, தர்மத்தை ரதமாக்கி, ரதசாரத்யம் செய்தவன் கண்ணன். வேதங்களை ஞானமார்க்கத்தில் பரமாத்மா ஓட்டிச் சென்றதே இதன் பூடகமான கருத்து. அர்ஜுனனிடம் இருந்தது கிருஷ்ண பக்தி.

''பற்றற்று இரு என்றவன் மீது, பற்று வைத்து அவனைப் பற்றிக் கொண்டவன் பார்த்தன்''

குருக்ஷேத்ர யுத்தத்தில் கிருஷ்ணன் சங்கை எடுத்து ஊதினான். அவனிடமிருந்த புல்லாங்குழலை ராதையிடம் தந்து விட்டான். அவளோ அதை கிருஷ்ணனாக ஆவாஹனம் செய்து விட்டாள். பிருந்தையென்ற கற்புக்கரசி கண்ணனிடம் லயித்தவள். அவளே துளசியாக மாறியவள். அந்த பிருந்தையென்ற துளசியின் வனமே பிருந்தாவனம்.

புருஷோத்தமனின் புல்லாங்குழலும் ஒரு தத்துவம் சொல்கிறது. மனித ஜீவனுக்கு நவத்துவாரங்கள். ஒன்பது ஓட்டைகள். அந்த நவத்துவாரங்கள் வழியாகவும் காற்று போகிறது. ஆசையாகிறது. பாசமாகிறது. புல்லாங்குழலிலும் ஒன்பது ஓட்டைகள் உண்டு. ஒரு ஓட்டையில் வாயை வைத்து காற்றை உள்ளே ஊதிச் செலுத்தி மற்ற ஓட்டைகளில் வெளிவரும் அதே காற்றை விரலை விதவிதமாக அழுத்தி திறக்கும் போது, காற்று நாதமாகிறது. கீதமாகிறது. அதே போல் உடலை புல்லாங்குழலாக்கி, காற்றை நாசித்துவாரம் மூலம் உள்ளிழுத்து பிராணாயாமம் செய்தால், உள்ளேயிருக்கும் நாதம் ஒலிப்பது நிச்சயம். இது தான் கண்ணன் கை குழலின் தத்துவம்.

''தத்'' என்றால் ''அது''. ''துவம்'' என்றால் ''நீ'' என்று பொருள்.

அது நீ யாகிறாய். அதுவே தத்துவம் எது நீ யாகிறாய்?

பரமாத்மா நீ யாகிறாய். கீதையை யுத்த களத்தில் சொன்னதே ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலும் ஒரே நேரத்தில், நடப்பது யுத்தத்தில் தானே. அதனால்தான் அங்கு கீதோபதேசம் செய்தான். அது தீயவர்களுக்கும் சாப விமோசனம் பாபவிமோசனமாக இருக்கட்டுமென்ற பரந்த மனம் பரந்தாமனுக்கு.

அந்த இடத்தில் தன் பிரதிநிதிக்கு பந்தம், பாசம், பயம், துக்கமென்ற மாயைகள் மனதில் வராமல் பக்குவப்படுத்தினான். அதர்மம் அழியும் நேரத்தில், தர்மத்தைச் சொன்னான். வெற்றி அகங்காரமாகக் கூடாது. வேகம் விவேகமிழக்கக் கூடாது. தீயவரிடம் நல்லவராக நடப்பது தவறு என்பதற்காக கர்மத்துக்கு தர்மம் குடைபிடித்து, தர்மமே கர்மத்தால் அழியக்கூடாதென்பதற்காக அந்த இடத்தில் சொன்னான். போரில் கண்ணன் 'பாஞ்ச ஜைன்ய'மென்ற சங்கினை ஊதினான்.

சங்கு ஊதுவானேன். அது ஒலித் தத்துவம். ஓங்கார தத்துவம். சங்கை ஊதுவதற்கு அடிவயிறான நாபி, தொண்டையென்ற கண்டம், மூக்குவழி சுவாசம் மூன்றும் இணைய வேண்டும். அப்போது ''ஓம்'' என்ற ஓங்கார ஒலி, பிரணவம் பிறக்கும்.

அ, உ, ம, . (புள்ளி) இணைந்தால் ஓம்.

அ என்பது விழிப்பு நிலையையும்

உ என்பது கனவு நிலையையும்

ம என்பது உறக்க நிலையையும்

ம மீதுள்ள . புள்ளி என்பது நிஸ்சிந்தையான பேருறக்க நிலையையும் குறிப்பவை. 'ஓம்' என்பது நான்கு நிலைகளின் கூட்டான நான்கும் தாண்டிய நிலை. சக்தியின் நிலை.

யோகம், யாகம், மூச்சு அனைத்துமே அன்னை சக்தியின் செயல். அதனால்தான் சங்கெடுத்து ஓம் என்று பிரணவ நாதமெழுப்பி போரைத் துவங்கினார் ஸ்ரீகிருஷ்ணன்.

பகவத் கீதையில்.... அந்த உபநிஷத்தில், லோகாயுதம், சமணம், பௌத்தம், சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷியம், மீமாம்சம், துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சித்தாந்தம், சைவ சித்தாந்தம், வேதாந்தம், யோகம் ஞானம், மெஞ்ஞானம், விஞ்ஞானம், பூகோள, பௌதீக, ரசாயன, விண்வெளிக் கோள் உட்பட அத்தனை தத்துவங்களுக்கும் மொத்தமாக கருத்துக்கூறி, அத்தனையுங்கலந்த மொத்த வடிவமாக கீதையை அருளுகின்றார்.

கண்ணன் கடவுளாக மட்டும் செயல்பட நினைத்திருந்தால் கௌரவர்களை நொடிப்பொழுதில் தானே அழித்து பாண்டவர்களிடம் ராஜ்யத்தை தந்திருக்க முடியும். அப்படியவர் செய்யாததும் அவர் கடவுள் என்பதால்தான்.

பகவானாக... அவர், ''படைத்த அத்தனை உயிர்களிடத்திலும் பாரபட்சமின்றி நடக்கக் கடமைப்பட்டவர்'' அதனால்தான் அவதார புருஷனாக, கண்ணனாக வந்தார். கண்ணன் மாயாவி, தேகி, விதேகி, பரமாத்மாவும் ஜீவாத்மாவும் எத்தகைய உறவில் உள்ளனவென்றால்... பூமியும் வானமும் நம் கண் பார்வையில் தொலைவில் தொடுவானமென்ற நிலையில் எங்கோ தொடுவது போல் தோற்றமளித்து, தொடாமலிருக்கிறதே. அப்படித்தான் அந்த உறவு. அறிவுபூர்வமான அத்தனை தர்க்க வாதங்களுக்கும் விடையாக இருப்பவன் அந்த வேணுகோபாலன்.

அந்த அடியார்க்கும் அடியவன் என் மனதை வருடியவன். இங்கு நிரப்பப்படும் எழுத்துக்களுக்கு நானல்ல சொந்தக்காரன். எழுத வைக்கிறான். எழுதுகிறேன். எழுத்தானான். எழுதினான். அவனிட்ட கட்டளை. எத்தனையோ ஆண்டுகள் என் மனம் செய்த தியானம்.

பாரதி 'கண்ணன் என் சேவகன்' என்றார். பாரதி நான் கண்ணனுக்கு சேவகன் என்கிறேன். கண்ணனாக ராமனாக வடிவெடுத்த திருமால் கலியுக தர்மத்தைக் காக்க திருமலை வாசனாக திருவேங்கடமெனும் திருப்பதியிலிருந்தபடி கர்மகாண்டத்தை காத்து ரட்சிக்கிறார்.

கடவுளர் எல்லாருமே கண்மூடித்தனமாகவே செயல்படுகின்றனர். சிவனோ கண்ணை மூடி நிஷ்டையில் தட்க்ஷிணாமூர்த்தியாக இருக்கிறார். கோபக்கார மனுஷன். Disturb செய்யக் கூடாது. மகாவிஷ்ணுவோ பள்ளி கொண்டு தூங்குமூஞ்சி சாமியாக படுத்துக்கிடக்கிறார். யார் நம்மை பார்க்கவிருக்கிறார் என குழம்பும் நம்மை காத்து ரட்சிக்க சதாசர்வகாலமும் நின்ற நிலையிலிருக்கிறார் திருவேங்கடத்தான். பச்சைக்கற்பூரத் திருமண் சார்த்தி கண்ணை மூடியிருக்கிறாரே. நாம் வந்ததும், நின்றதும் எப்படித் தெரியுமென கேட்கலாம். பார்த்தால் வரும் பக்தர்களிடத்தில் பாரபட்சமாக நடக்க நேரிடலாம். நீதி தேவதையைப் போல் கண்மூடி கருணை செய்யலாம் என்று அந்த துலாபாரி நினைக்கிறாராம். வந்தவனுக்கு முன்வினையென்ன? எப்படி அதை போக்கலாம். என்னென்ன நன்மை தரலாமென கண்ணை மூடி யோசிக்கிறாராம். கண்ணைக் கட்டி காட்டில் விட்டது போல் 'அனுக்ரகம்' தரும் பணியை மட்டுமே செய்கிறாராம்.

வேங்கடரமணா கோவிந்தா. சங்கடஹரணா கோவிந்தா, ஸ்ரீனிவாசா கோவிந்தா என அழைப்போரும் ''ஜெய் பாலாஜி கிஜே'' கோஷமும் ஏழு மலையானுக்கு அரோகர வென்ற காணிக்கை ஒலியும் வருடம் முன்னூற்றி அறுபத்தைந்து நாளும், இருபத்தி நான்கு மணி நேரமும் அறுபது நிமிடமும் அல்லும் பகலும் கேட்டுக் கொண்டு வந்தாரை வாழ்வளித்து உயர்வளிக்க வந்த தெய்வமே ஸ்ரீவேங்கட வரதன்.

வேங்கடேசாய நம:

பெருமாளை நினைக்கும் எவரும், அவரை தரிசிக்கும் எவரும் முதலில் வராஹரை நினைத்து, வணங்கி, தரிசித்த

பின்னரே பெருமாளை சேவார்த்தி செய்ய வேண்டும். இதுவே நியமானுஷ்டமான நியதி. திருப்பதி பெருமாளுக்கு மூத்தவர்கள் குணசீலம். ஸ்ரீபிரசன்ன வேங்கடேச பெருமாளும், உப்பிலியப்பனும். இன்றுங்கூட திருப்பதிக்கு வேண்டிக் கொண்டு இயலாமற்போனால் குணசீலம், உப்பிலியப்பன் கோயிலில் வேண்டுதலை நிறைவேற்றலாம். அப்படியொரு பெருமாள் அனுமதியுண்டு. சமஸ்தாபிரத பிரியர். பிரார்த்தனை, காணிக்கைகளில் அபராதம் செலுத்த வேண்டும். வட்டி கேட்கும் வடமலையான் அவர்.

ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய

மாமேகம் சரணம் வ்ரஜ

அஹம்த்வா ஸர்வபாபேப்யோ

மோக்ஷயிஷ்யாமி மாஸீச:

மாம் கைம் சரணம் வ்ரஜ.

சரணாகதியென தஞ்சம் அடைந்தவர்களை காக்கும் கடவுள் நான் ஒருவனே என உறுதியாகக் கூறுபவர்களுக்கு காக்கும் கடவுள். அப்படிப்பட்ட பெருமாளை பாடாதாரில்லை. திரை விலகி தரிசனம் தாருங்களென்று நாமத்தை சங்கீத நாதோபாசனம் செய்த தியாகராஜ ஸ்வாமிகள் கேட்டார். ஊஞ்சலிலே உத்தமபுருஷனை ல்ாலி பாடி அன்னம்மாச்சாரியார் கீர்த்தனம் பாடினார்.

''கோவிந்த நாம சங்கீர்த்தனம் கோவிந்தா கோவிந்தா'' என்பர்.

கோவிந்தாவென்ற கோவிந்தனின் நாமமே சங்கீர்த்தனத்துக்கு சமம். சங்கீத கீர்த்தனப்ரியன் அந்த சங்கரன் மைத்துனன் கீர்த்திவாசன், கிரிதாரி. அவன் வரலாறு பலரால் பலவாக பலமுறை பலவிதத்தில் வெளிவந்து கொண்டுதானிருக்கிறது. அதில் எனது பணியும் ராமன் அணை கட்டும் போது சின்ன அணிலும் தன் சிறு பங்கை செய்தது

போன்ற சிறு பணியே. அகில உலகையுங்காக்கும் ஸ்ரீநாராயணன் கிருதயுகத்தில் மச்ச, கூர்ம, வராக, நரசிம்ஹ, வாமனராகவும், திரேதாயுகத்தில் பரசுராம, ராமராகவும், துவாபர யுகத்தில் பலராம, ஸ்ரீகிருஷ்ணராகவும்... அதையடுத்த கலியுகத்தில் பிரத்யட்ச தெய்வமாக ஸப்தகிரியில் ஸ்ரீ வேங்கடேசாய நம: என்ற சத்தத்தின் ஒலி வழிபாட்டுடன் காத்து ரட்சிப்பதே கடமையாக கண்ணயரா கடவுளாக நின்ற நிலையில் எழுந்தருளியிருக்கின்றார்.

பூமாதேவியை மகாவிஷ்ணுவே வராகமாக வந்து மீட்பதாக ஐதீகம்.

ஏழு மலைகளும் வராககிரி, விருஷபகிரி, சேஷகிரி, அஞ்சனாகிரி, வேங்கடகிரி, நாராயணகிரி, ஞானகிரி என பெயர் கொண்டன.

அறுபத்தி ஆறு கோடி தீர்த்தங்கள் கொண்ட புஷ்கரணி மிக விசேஷம். அகத்தியர், வசிஷ்டர், நாரதர், வியாசர், அத்திரி, வால்மீகி, சுகர், கொங்கணவர் இப்படி ரிஷிகள் சிரேஷ்டமாக சொன்னதே திருமலை.

திருவே திருவின் உருவே திவ்ய மங்கள சொரூபமே உம்மை எழுத்தால் எழுதி நிறைவுபடாது. தொகுத்து நூலாக்க முதலில் ஸ்ரீராம சங்கீர்த்தனத்தை தொகுத்தெழுதி பிறகு ஸ்ரீவேங்கடேசனின் ஆயிரம் நாமாவளியை, ஆயிரம் நாக்கு படைத்த ஆதிசேஷனை பஞ்சணையாகக் கொண்டவனை அவந்தம் சஹஸ்ரநாமத்தையும் பொருளும் எழுத அந்த பரம் பொருளே. அருளும் துணையுமாயிருக்க வேண்டுகின்றேன். என் சிற்றறிவுக்குத் தெரிந்து இருபதாண்டுக்குட்பட்டு எவரும் அதை புத்தகமாக்கவில்லையென்று கருதுகிறேன். கருதுவது தவறாகலாம். அப்படியிருந்தால் எனது பிரார்த்தனைக் கடனாக இந்நூலை எழுதுகிறேன். பக்தன் அங்கப்பிரதட்சணம் செய்வான். பணமுள்ளவன் காணிக்கை செலுத்துவான். எழுத்தாளன் எழுத்தால் 'அட்க்ஷரோபாசனம்' செய்ததாக கொள்ளட்டுமே.

பெருமாள் எப்படி எவர் பக்தி செலுத்தினாலும் ஏற்றுக் கொள்பவர். எல்லாரும் அவரை மலராலும் ருக்மிணி துளசியாலும் அர்ச்சிக்க பீஷ்மர் மட்டும் அம்புகளால் அச்சுதாய நம: அனந்தாய நம: என பாணார்ச்சனை செய்ய வலித்தவர் போல அவருக்கு விஸ்வரூப தரிசனமளித்த வேங்கடமான பரந்தாமன் 'பக்தியை' எப்படியும் ஏற்கும் பெரிய மனங்கொண்ட எளியவருக்கும் இரங்கும் கருணாசாகரம். வையாவூரில் வந்த குடிகொண்டவன். ராமனைப்பாடி கண்ணனை போற்றி வேங்கட வரதன் ஆயிரநாமாவளி சொல்வதே முறை. வண்ணங்களில் ராமன் நீலன். நீலமேகம். கண்ணன் கருப்பன். தெய்வங்களுள் ஒரு வேடிக்கை கவனித்தீர்களா. கண்ணன் வெண்ணை தின்றான். பொன்னன் சிவனோ விஷத்தை குடித்தான். பாற்கடலை கடைந்து வந்த ஸ்ரீலக்ஷ்மியை திருமால் எடுத்துக் கொண்டார். நஞ்சை நஞ்சுண்டன் எடுத்துக் கொண்டான்.

லக்ஷ்மி நாராயணனைப் பாடினால் அஷ்டலக்ஷ்மியும் அரவணைப்பார்கள். இனி ராமாயண காண்டங்களின் சங்கீர்த்தனங்களை தொகுத்திடுகிறேன். இவை முன்னோரளித்த பொக்கிஷம். தேடிப்பிடித்து தொகுப்பாக்குவதே எனது பணி.

''ராம நாம ஸங்கீர்த்தனம்''

உ

ராம்

ஓம் ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெய ராம்

ஓம் ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன

ஹனுமத் ஸமேத ஸ்ரீராமச்சந்த்ர

பரப்ருஹ்மணே நம:

ஆர்த்தா நாமார்த்தி ஹந்தாரம்

பீதாநாம் பயநாசநம்

த்விஷதாம் காலதண்டம் தம்

ராமச்சந்த்ரம் நமாம்யஹம்

ஆபதாமபஹர்த்தாரம் தாதாரம்

ஸர்வ ஸம்பதாம்

லோகாபிராமம் ஸ்ரீ ராமம்

பூயோ பூயோ நமாம்யஹம்

ஸ்ரீ ராம நாம ராமாயணம்

1. சுத்த ப்ரஹ்ம பராத்பர ராம
2. காலாத்மக பரமேச்வர ராம
3. சேஷதல்ப ஸுக நித்ரித ராம
4. ப்ரஹ்மா த்யமர ப்ரார்த்தித ராம
5. சண்டகிரணகுல மண்டந ராம
6. ஸ்ரீமத் தசரத நந்தன ராம
7. கௌஸல்யா ஸுகவர்த்தந ராம
8. விச்வாமித்ர ப்ரியதன ராம
9. கோர தாடகா காதக ராம
10. மாரீசாதி நிபாதக ராம
11. கௌசிக மகஸம்ரக்ஷக ராம
12. ஸ்ரீ மதஹல்யோத்தாரக ராம
13. கௌதம முனிஸம் பூஜித ராம
14. ஸுரமுனிகண ஸம்ஸ்துத ராம
15. நாவிகதாவித ம்ருதுபத ராம
16. மிதிலாபுரஜன மோஹக ராம

17. விதேஹ மானஸ ரஞ்ஜக ராம
18. த்ரியம்பக கார்முக பஞ்ஜக ராம
19. ஸீதார்ப்பித வர மாலிக ராம
20. க்ருதவைவாஹிக கௌதுக ராம
21. பார்க்கவ தர்ப்ப விநாசக ராம
22. ஸ்ரீ மதயோத்யா பாலக ராம

"அயோத்யா காண்டம்"

23. அகணித குணகண் பூஷித ராம
24. அவநீதநயா காமீத ராம
25. ராகாசந்த்ர ஸமாநந ராம
26. பித்ரு வாக்யாச்ரித காநந ராம
27. ப்ரியகுஹ விநிவேதித ராம
28. தத்க்ஷாலித நிஜ ம்ருதுபத ராம
29. பரத்வாஜமுகா நந்தக ராம
30. சித்ரகூடத்ரி நிகேதந ராம
31. தசரத ஸந்தத சிந்தித ராம
32. கைகேயீ தநயார்த்தித ராம
33. விரசித நிஜ பித்ருகர்மக ராம
34. பரதார்பித நிஜ பாதுக ராம

"ஆரண்ய காண்டம்'

35. தண்டகாவந ஜந பாவந ராம
36. துஷ்ட விராத விநாசன ராம
37. சரபங்க ஸுதீக்ஷ்ண அர்ச்சித ராம
38. அகஸ்த்யாநுக்ரஹ வர்த்தித ராம

39. க்ருத்ராதிப ஸம்ஸேவித ராம
40. பஞ்சவடீ தட ஸுஸ்தித ராம
41. சூர்ப்பணகார்த்தி விதாயக ராம
42. கர தூஷணமுக ஸூதக ராம
43. ஸீதாப்ரிய ஹரிணா நுக ராம
44. மாரீசார்த்தி க்ருதாசுக ராம
45. விநஷ்ட ஸீதாந் வேஷக ராம
46. க்ருத்ராதிபத கதி தாயக ராம
47. சபரீ தத்த பலாசந ராம
48. கபந்த பாஹுச் சேதந ராம.

'கிஷ்கிந்தா காண்டம்'

49. ஹநுமந் ஸேவித நிஜபத ராம
50. நத ஸுக்ரீவாபீஷ்டத ராம
51. கர்வித வாலி ஸம்ஹாரக ராம
52. வாநர தூத ப்ரேஷக ராம
53. ஹிதகர லக்ஷ்மண ஸம்யுத ராம

'ஸுந்தர காண்டம்'

54. கபிவர ஸந்தத ஸம்ஸ்ம்ருத ராம
55. தக்கதி விக்ந த்வம்ஸக ராம
56. ஸீதா ப்ராணா தாரக ராம
57. துஷ்ட தசாநந தூஷித ராம
58. சிஷ்ட ஹநுமத் பூஷித ராம
59. ஸீதா வேதித காகாவந ராம

60. க்ருத சூடாமணி தர்சந ராம
61. கபிவர வசனா ச்வாஸித ராம

'யுத்த காண்டம்'

62. ராவண நிதநப்ரஸ்தித ராம
63. வாநர ஸைந்ய ஸமாவ்ருத ராம
64. ஷோஜித ஸரி த் சார்த்தித ராம
65. விபீஷணாபய தாயக ராம
66. பர்வத ஸேது நிபந்தக ராம
67. கும்பகர்ண சிரத்சேதக ராம
68. ராக்ஷஸ ஸங்க விமர்த்தக ராம
69. அஹிமஹி ராவண சாரண ராம
70. ஸம்ஹ்ருத தசமுக ராவண ராம
71. விதிபவ முகஸுர ஸம்ஸ்துத ராம
72. கஸ்தித தசரத வீக்ஷித ராம
73. ஸீதா தர்சன மோதித ராம
74. அபிஷிக்த விபீஷணநத ராம
75. புஷ்பக யாநா ரோஹண ராம
76. பரத்வாஜாபி நிஷேவன ராம
77. பரத ப்ராண ப்ரியகர ராம
78. ஸாகேதபுரீ பூஷண ராம
79. ஸகல ஸ்வீய ஸமாநத ராம
80. ரத்ந லஸத் பீடாஸ்தித ராம
81. பட்டாபிஷேகாலங்க்ருத ராம
82. பார்த்திவ குல ஸம்மாநித ராம

83. விபீஷணார்ப்பித ரங்கக ராம

84. கீசகுலா நுக்ரஹகர ராம

85. ஸகல ஜீவ ஸம்ரக்ஷக ராம

86. ஸமஸ்த லோகா தாரக ராம

'உத்தர காண்டம்'

87. ஆகதமுனிகண ஸம்ஸ்துத ராம

88. விச்ருத தசகண்டோத்பவ ராம

89. ஸீதா லிங்கந நிர்வ்ருத ராம

90. நீதிஸுரக்ஷித ஜநபத ராம

91. விபிந த்யாஜித ஜநகஜ ராம

92. காரித லவணாஸுரவத ராம

93. ஸ்வர்க்கத சம்புக ஸம்ஸ்துத ராம

94. ஸ்வதநய குசலவ நந்தித ராம

95. அச்வமேத க்ரது தீக்ஷித ராம

96. காலாவேதித ஸுரபத ராம

97. அயோத்ய கஜந முக்தித ராம

98. விதிமுக விபுதா நந்தக ராம

99. தேஜோமய நிஜரூபக ராம

100. ஸம்ஸ்ருதி பந்த விமோசக ராம

101. தர்ம ஸ்தாபந தத்பர ராம

102. பக்தி பாராயண முக்தித ராம

103. ஸர்வ சராசர பாலக ராம

104. ஸர்வ பவாம வாரக ராம

105. வைகுண்டாலய ஸம்ஸ்தித ராம

106. நித்யாநந்த பதஸ்தித ராம

107. ராம ராம ஜெய ராஜா ராம

108. ராம ராம ஜெய ஸீதா ராம

---

யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருத மஸ்த காஞ்ஜலிம்
பாஷ்பவாரி பரிபூர்ண லோசநம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ஓம்.

சுப மங்களம் ராம மங்களம்

விசேஷமான ராம நாம சங்கீர்த்தனத்தை நீங்கள் படித்து புண்ணியம் பெற காஞ்சி முனிவர் அருளால் H.H. சிவசங்கரா அனுக்கிரக ஆணையால் தேடித்தொகுத்து எழுதிய எனக்கும் பலன் கிடைக்கிறதே. இனி ஸ்ரீ வேங்கடேச ஸஹஸ்ரநாம நாமாவளியை தமிழில் தொகுக்க பெருமாளே உடனிருக்க பிரார்த்திக்கிறேன். பரம்பொருள் பகவான் அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவது என்ற ஒரே சங்கல்பத்தில் அவதாரமெடுத்தார். திருமலைத் தெய்வம் பிரும்மா விஷ்ணு சிவத்தையும் ஸ்ரீஆதி பராம்பிகையின் சக்தியையும் ஒன்று கலந்து பிரும்ம விஷ்ணு சிவசக்தி அம்சமாக லக்ஷ்மிகடாட்ச சொரூபமாக ஸ்மஷ்டி மூர்த்தியாக பத்து திக்கின் பக்தர்களையும் அருள் தந்து காக்க திருக்கோயில் கொண்டவர்.

கைமேல் பலன் தருபவர். குருவை வணங்கி, பொருளுணர்ந்து நாமஸ்மரணை செய்யும் ஸ்லோக வழிபாட்டில் பகவான் மெய் மறந்து கிருபாகடாட்க்ஷம் செய்வார். இது உறுதி. மங்களாசாஸன மகாபிரபு அவரை உங்களுடன் சேர்ந்து நானும் எழுதி வழிபடுகிறேன். சிவசங்கர பரப்ருஹ்மணே நம:

1. ஸ்ரீ வேங்கடேசாய நம:

வம்: அம்ருதம், ஏம்: சக்தி, கம்: பிரும்மா, டம்: தனம், சம்:மங்களம். இந்த பஞ்ச பீஜாட்க்ஷரங்களும் இணைந்த மூர்த்தியே ஸ்ரீவேங்கடேசரே உமக்கு நமஸ்காரங்கள்.

2. விரூபாக்ஷாய நம:

ஹரனும் ஹரியும் (சிவனும் விஷ்ணுவும்) பேதமின்றி கலந்த அபேத மூர்த்திகள். அதனால் விரூபாக்ஷனான சிவனே நமஸ்காரம்.

3. விஸ்வேஸ்வராய நம:

விஸ்வம் என்றால் உலகம். புவனம். மூன்று உலகங்கட்கும் (த்ரி புவனங்கட்கும்) ஈஸ்வரனாக விளங்குபவரே நமஸ்காரம்.

4. விஸ்வ பாவனாய நம:

உலகமாகவே (அண்டமாக) வியாபித்திருப்பவரே நமஸ்காரம்.

5. விஸ்வஸ்ருஜே நம:

புவனத்தை ஸ்ருஷ்டி செய்த பிரம்ம சொரூபமே நமஸ்காரம்.

6. விஸ்வஸம் ஹார்த்ரே நம:

புவனத்தின் சம்ஹார மூர்த்தியே நமஸ்காரம்

7. விஸ்வப்ராணாய நம:

த்ரி புவனங்களின் பிராணனாக இருப்பவரே நமஸ்காரம்.

8. விஸ்வராட் ப்ரபவே நம:

த்ரி புவனங்களின் பிரபுவே நமஸ்காரம்.

9. சேஷாத்ரி நிலயாய நம:

ஆதிசேஷ ஸ்தலமான சேஷாத்ரி மலையை வாசஸ்தலமாகக் கொண்டவரே நமஸ்காரம்.

10. அசேஷ பக்த துக்க ப்ரணாசனாய நம:

விசேஷம் என்றால் சிறப்பு. அதன் எதிர்மறை வாக்கியம் அசேஷம்.' பக்தர்களின் அழிக்கும் துக்ககரமானவற்றை நொடியில் போக்குபவரே நமஸ்காரம்.

11. சேஷப்ருத்யாய நம:

ஆதசேஷனை அணிகலனாகக் கொண்டவரே நமஸ்காரம்.

12. சேஷசாயினே நம:

ஆதிசேஷன் மீது சயனித்திருப்பவரே நமஸ்காரம்.

13. விசேஷக்ஞாய நம:

சிறந்த ஞானமூர்த்தியானவரே நமஸ்காரம்.

14. விபவே நம:

எங்கும் வியாபித்திருப்பவரே நமஸ்காரம்.

15. ஸ்வபுவே நம:

சுயம்பிரகாசமானவரே நமஸ்காரம்.

16. விஷ்ணவே நம:

விஷ்ணு சொரூபமே நமஸ்காரம்.

17. ஜிஷ்ணவே நம:

(வெற்றியின்) ஜெயத்தின் சின்னமே நமஸ்காரம்.

18. வர்திஷ்ணவே நம:

நன்மைகளை வர்ஷிப்பவரே (வளர்ப்பவரே) நமஸ்காரம்.

19. உத்ஸஹிஷ்ணவே நம:

உத்ஸவ மூர்த்தியாக சதாசர்வகாலமும் இருப்பவரே நமஸ்காரம்.

20. ஸஹிஷ்ணுகாய நம:

சகிப்புத்தன்மையுடையவரே நமஸ்காரம்.

21. ப்ராஜிஷ்ணவே நம:

ப்ரகாசமானவரே நமஸ்காரம்.

22. க்ரஸிஷ்ணவே நம:

(கெட்டதை) கபளீகரம் செய்பவரே நமஸ்காரம்.

23. வர்த்திஷ்ணவே நம:

(புண்ணியத்தை) உற்பத்தி செய்பவரே நமஸ்காரம்.

24. பரிஷ்ணுகாய நம:

(சுக துக்கங்களை) ஒன்றாக கட்டுபவரே நமஸ்காரம்.

25. காலயந்த்ரே நம:

காலயந்திரமாக சுழல்பவரே நமஸ்காரம்.

26. கால கோப்த்ரே நம:

கால ரகசியத்தை காப்பவரே நமஸ்காரம்.

27. காலாய நம:

காலங்களின் சொரூபமே நமஸ்காரம்.

28. காலாந்தகாய நம:

காலனை அழிப்பவரே நமஸ்காரம்.

29. அகிலாய நம:

கனபரிமாணமற்றவரே நமஸ்காரம்.

30. காலசம்யாய நம:

காலத்தை செலுத்துபவரே நமஸ்காரம்.

31. காலகண்டாய நம:

ஆலகாலத்தை உண்ட நீலகண்டமான சிவசொரூபமே நமஸ்காரம்.

32. காலகாலாய நம:

காலனுக்கும் காலநிர்ணயமாக விளங்குபவரே நமஸ்காரம்.

33. காலேஸ்வராய நம:

காலத்தின் ஈஸ்வரனே நமஸ்காரம்.

34. சம்பவே நம:

மங்களத்தை தரும் சாம்பமூர்த்தியே நமஸ்காரம்.

35. ஸ்வயம்புவே நம:

சுயம்புவானவரே நமஸ்காரம்.

36. அம்போஜ நாபாய நம:

தாமரை போன்ற நாபியுடையவரே நமஸ்காரம்.

37. ஸ்தம்பித வாரிதயே நம:

ஜலசமுத்ரத்தை ஸ்தம்பித்து அசையாமற் செய்தவரே நமஸ்காரம்.

38. அம்போத நந்தினீ ஜானயே நம:

பாற்கடலிலிருந்து நந்தினீயென்ற காமதேனுவை சிருஷ்டித்தவரே நமஸ்காரம்.

39. சோனாம்போஜ பதப்ரபாய நம:

செந்தாமரை போன்ற சாயலுடைய பாதங்களைக் கொண்டவரே நமஸ்காரம்.

40. கம்புக்ரீவாய நம:

(வலம்புரி) சங்கு கழுத்துடையவரே நமஸ்காரம்.

41. சம்பராரி ரூபாய நம:

சம்பாசுரனென்ற அரக்கனை அழிக்க அவதரித்தவரே நமஸ்காரம்.

42. சம்பர பக்ஷணாய நம:

சம்பாசுரனை கபளீகரம் செய்தவரே நமஸ்கரம்.

43. பிம்பாதராய நம:

பிம்பம் போன்ற அதரங்களை உடையவரே நமஸ்காரம்.

44. பிம்பரூபிணே நம:

பிம்பமாக (மூர்த்தமாக) ஸ்வரூபம் கொண்டவரே நமஸ்காரம்.

45. ப்ரதி பிம்பக்ரியாதிகாய நம:

பக்தனை தனது பிரதிபிம்பமாக செய்பவரே நமஸ்காரம்.

46. குணவதே நம:

(கல்யாண) குணவானே நமஸ்காரம்.

47. குணகம்யாய நம:

நற்குணங்களை தருபவரே நமஸ்காரம்.

48. குணாதீதாய நம:

உத்க்ருஷ்டமான குணமுடையவரே நமஸ்காரம்.

49. குணப்ரியாய நம:

நற்குணமுடையனை விரும்புவரே நமஸ்காரம்.

50. துர்க்குணருத் வம்ஸக்ருதே நம:

நினைத்த மாத்திரத்தில் அருள்கடாக்ஷத்தால் தீய குணங்களை அழிப்பவரே நமஸ்காரம்.

51. ஸத்வ குணப்ருதே நம:

குணங்களின் பிரிவில் 'ஸத்வம்' என்பதை அணிகலனாக உடையவரே நமஸ்காரம்.

52. குணபாஸகாய நம:

குணநலன்களால் உயர்ந்தவரே நமஸ்காரம்.

53. பரேசாய நம:

இகம் எதிர்மறை பரம். பரத்திற்கும் அப்பாற்பட்டது சூன்யம். பேரொளி. (அந்த) பரத்தின் ஈசனே நமஸ்காரம்.

54. பரமாத்மனே நம:

பரமாத்மாவே நமஸ்காரம்.

55. பரஸ்மை ஜோதிஷே நம:

பரம்பொருளெனும் பேரொளியே நமஸ்காரம்.

56. பரஸ்மை கதயே நம:

பரம் என்ற பரமாத்ம நிலையின் வழியாக இருப்பவரே நமஸ்காரம்.

57. பரஸ்மை பதாய நம:

பரமபதமெனப்படும் பரமாத்மா நிலையை தருபவரே, தரவல்லவரே நமஸ்காரம்.

58. வியத்வாஸஸே நம:

ஆகாயத்திலிருப்பவரே நமஸ்காரம். (ஆகாயமாக யிருப்பவரும் அவரே)

59. பாரம்பர்ய சுபப்ரதாய நம:

பக்தனின் பரம்பரையெனப்படும் வம்சாவளியையும் சுபமாக மங்களகரமாக வைப்பவரே நமஸ்காரம்.

60. ப்ரம்மாண்ட கர்ப்பாய நம:

அண்டத்திலும் பெரியது பிரம்மாண்டம். அந்த பிரம்மாண்டத்தை கர்ப்பவாசத்தில் வைத்திருப்பவரே நமஸ்காரம். (பிரம்மன் விஷ்ணுவின் நாபித்தாமரையில் இருப்பவன். வெங்கடாஜலபதியின் இடது கை இருக்கும் விதத்தை பார்த்தால் புரியும்).

61. ப்ரம்மண்யாய நம:

பிரம்மத்தை தூய முறையில் கொண்டவரே நமஸ்காரம்.

62. ப்ரம்மஸத் ப்ரஹ்ம போதிதாய நம:

அகத்தூய்மை கொண்ட பிரம்ம தேஜஸ்விகளால் ஆராதிக்கப்படுபவரே நமஸ்காரம்.

63. ப்ரம்ம பிருத்யாய நம:

பிரும்மத்தை தாங்குபவரே நமஸ்காரம். (பிரும்மம் அவர் அணிகலன்).

64. ப்ரும்ம வாதினே நம:

பிரும்ம வாக்யத்தை தனக்குத் தானே அனுஷ்டானம் செய்பவரே நமஸ்காரம்.

65. ப்ரம்மச்சர்ய பராயணாய நம:

பிரும்மச்சர்ய விரதத்தை கடைப்பிடிப்பவரே நமஸ்காரம். (தர்மசாஸ்தா நிலை).

66. ஸத்ய வ்ரதார்த்த ஸந்த்ருப்தாய நம:

முறையான உண்மையான விரதங்களை அனுஷ்டித்தால் மனப்பூர்வமாக மகிழ்பவரே நமஸ்காரம்.

67. ஸத்யரூபிணே நம:

சத்திய சொரூபமே நமஸ்காரம்.

68. ஜஷாங்கவதே நம:

மச்சாவதாரமெடுத்தவரே நமஸ்காரம்.

(மச்சாவதாரமெடுத்து வேதங்களை காத்தவர்.)

69. சங்கப்ராணாபஹாரிணே நம:

சங்கன் என்ற அசுரனை (மச்சாவதாரத்தில்) வதம் செய்தவரே நமஸ்காரம்.

70. கச்சபாய நம:

கூர்மாவதாரியே நமஸ்காரம்.

71. அப்திசஞ்சாராய நம:

சமுத்திரத்தில் சஞ்சரிப்பவரே நமஸ்காரம்.

72. தேவாஸுரஸ்துதி ஸ்துத்யாய நம:

தேவர்களாலும் அசுரர்களாலும் போற்றிப் பாடப்பட்டவரே நமஸ்காரம்.

73. பதந்மந்தர தாரிகாய நம:

(பாற்கடலை கடையும் போது மந்திரகிரியை மத்தாக்கினார்கள். அது அமிழாமல் கூர்மமாக தாங்கியவர்) அமிழ்ந்த மந்திர கிரியை தாங்கியவரே நமஸ்காரம்.

74. தந்வந்தரயே நம:

தந்வந்திரியே நமஸ்காரம். (தந்வந்திரியே தேவ மருத்துவர். மருத்துவ தேவன்)

75. க்ருபா பாங்காய நம:

கிருபா கடாட்சமளிப்பவரே நமஸ்காரம்.

76. பயோநிதி விமந்தகாய நம:

பாற்கடலை கடைவதில் தலைமை ஏற்றவரே நமஸ்காரம். (அக்ர ஸ்தானாதிபதி விஷ்ணு)

77. அம்ருதாய நம:

அமுதமே நமஸ்காரம்.

78. அம்ருத ஸந்தாத்ரே நம:

அமுதத்தை வழங்கியவரே நமஸ்காரம். (அமுதத்தை மோகினி வடிவில் விநியோகம் செய்து பரிமாறியவர் விஷ்ணு).

79. நரநாரயணீவபுஷே நம:

நாராயணீயாக வேஷமிட்டவரே (மோகினி அவதாரம்) நமஸ்காரம்.

80. ஹரமோஹக மாயாவினே நம:

(சிவனை) ஹரனை மோகத்திலாழ்த்திய மாயாவியே நமஸ்காரம்.

81. ரக்ஷ: ஸந்தோஹ பஞ்சனாய நம:

ராட்சஷர்களின் (அசுரர்களின்) சூழ்ச்சியை அழித்த' நமஸ்காரம்.

82. ஹிரண்யாக்ஷ விதாரிணே நம:

ஹிரண்யாக்ஷனை கிழித்தெறிந்தவரே நமஸ்காரம். (நரஸிம்ஹம அவதாரத்தில்)

83. யக்ஞாய நம:

யக்ஞ (யாக) ரூபமானவரே நமஸ்காரம்.

84. யக்ஞ விபாவனாய நம:

யக்ஞத்தின் இலக்கணமாக திகழ்பவரே நமஸ்காரம்.

85. யக்ஞேசாய நம:

யக்ஞத்தின் ஈஸ்வரனே நமஸ்காரம்.

86. உர்வீஸமுத்தர்த்ரே நம:

சமுத்திரத்தால் மூழ்கடிக்கப்படாமல் பூமியை காத்தவரே நமஸ்காரம்.

87. லீலாக்ரோடாய நம:

வராஹ அவதார லீலை செய்தவரே நமஸ்காரம்.

88. ப்ரதாபவதே நம:

வீரப்ரதாபத்திற்குரியவரே நமஸ்காரம். (கீர்த்திவாசன்).

89. தண்டகாஸுர வித்வம்ஸினே நம:

தண்டகாசுரர்களை வதம் செய்தவரே நமஸ்காரம்.

90. வக்ர தம்ஷ்ட்ரிணே நம:

கோணலான பற்களை உடையவரே நமஸ்காரம். (வராஹ அவதாரி)

91. க்ஷமாதவாய நம:

(மன்னிக்கும்) க்ஷமிக்கும் தன்மை உடையவரே நமஸ்காரம்.

92. கந்தர்வ சாபஹரணாய நம:

கந்தர்வ சாபத்தை போக்கியவரே நமஸ்காரம்.

93. புண்யகந்தாய நம:

நறுமணம் வீசுபவரே நமஸ்காரம்.

94. விசக்ஷணாய நம:

பார்த்தமாத்திரத்தில் நற்கதி அருளுபவரே நமஸ்காரம்.

95. கரால வக்த்ராய நம:

தீயதை அழிக்கும் வசீகர முகமுடையவரே நமஸ்காரம்.

96. ஸோமார்க்க நேத்ராய நம:

சூரிய சந்திரனை இரு கண்களாக உடையவரே நமஸ்காரம்.

97. ஷட்குணவைபவாய நம:

விசேஷமான ஆறு குணங்களாலும் போற்றப்படுவரே நமஸ்காரம்.

98. ச்வேதகோணாய நம:

வெண்மை மூலையிருப்பவரே நமஸ்காரம்.

99. கூர்ணிதப்ருவே நம:

கூடிய புருவங்களை யுடையவரே நமஸ்காரம்.

100. கர்க்கரத்வனி விப்ரபாவாய நம:

அனைத்தையும் தன்வசமாக்கி வைக்கும் ஒலியை எழுப்புபவரே நமஸ்காரம். (கோவிந்தம்...)

101. த்ராதிஷ்டாய நம:

நீண்டு விரிந்தசொரூபியே நமஸ்காரம்.

102. நீலகேசினே நம:

நீலநிறமுடைய ரோமங்களைக் கொண்டவரே நமஸ்காரம்.

103. ஜாக்ரதே நம:

"ஜாக்ரதம்" எனப்படும் விழிப்பு நிலையில் எப்போதுமிருப்பவரே நமஸ்காரம். (திருப்பதியில் பெருமாள் உறங்கக் கூட நேரமில்லாமல் வரும் பக்தர்களை அனுக்ரகம் செய்ய விழித்துக் கொண்டே நின்று கொண்டிருக்கிறார்.)

104. அம்புஜ லோசனாய நம:

தாமரைக் கண்ணனே நமஸ்காரம்.

105. க்ருணாவதே நம:

எவரும் எதிரில் நிற்க துணியாதவராக இருப்பவரே நமஸ்காரம்.

106. க்ருணீ ஸந்தோஷாய நம:

எதிர்ப்படும் பக்தனுக்கு பேரின்ப நிலை அளிப்பவரே நமஸ்காரம்.

107. மஹாகாலாக்னி தீதிதயே நம:

(ஸம்ஹார மூர்த்தியாக) காலாக்னியை அள்ளிவீசுபவரே நமஸ்காரம்.

108. ஜ்வாலாகரால வதனாய நம:

ஜ்வாலை வீசும் முகவதன முடையவரே நமஸ்காரம்.

109. மஹோல்காகுல வீக்ஷணாய நம:

கடைக்கண் பார்வை தீயின் ஒளியாகக் கொண்டவரே நமஸ்காரம்.

110. சடாவிபின்ன மேகௌகாய நம:

மேகக் கூட்டமான சடாமுடியுடையவரே நமஸ்காரம்.

111. தம்ஷ்ட்ராருக்வ் யாப்த திக்தடாய நம:

எல்லா திக்குகளிலும் தன் பல் வலிமையால் கலக்கத்தை தரச் செய்பவரே நமஸ்காரம்.

112. ஸம்முகாக்ருஷ்ட புவனாய நம:

முகதேஜஸால் புவனத்தை தன்பால் ஈர்த்துக் கொள்பவரே நமஸ்காரம்.

113. நி:ஸ்வாஸவ்யாப்த விஸ்வதஸே நம:

தனது சுவாசிப்பில் உலகத்தையே ரட்சிக்கும் புவனேஸ்வரரே நமஸ்காரம்.

114. அந்தர் ப்ரமஜ்ஜகத் கர்பாய நம:

தனக்குள் உலகத்தை பிரம்மமாகிய உலகை வைத்திருப்பவரே நமஸ்காரம்.

115. அனந்த ப்ருஹ்ம கபால ப்ருதே நம:

பிரும்மானந்தத்தை தன் கபால கதியில் வைத்திருப்பவரே நமஸ்காரம். (கையிருப்பில் வைத்திருப்பவர்)

116. உக்ராய நம:

உக்ர சொரூபியே நமஸ்காரம்.

117. வீராய நம:

மாவீரரே நமஸ்காரம்.

118. மஹா ஜிஷ்ணவே நம:

மகத்தான ஜோதிசொரூபியே நமஸ்காரம்.

119. ஜ்வலனாய நம:

(கொழுந்து விட்டு எரிகின்ற) ஜ்வாலையை சோபையாகக் கொண்டவரே நமஸ்காரம்.

120. சர்வ-தோமுகாய நம:

(எல்லா இடத்திலும்) எங்கும் ஒளிரும் முகலாவண்யமே நமஸ்காரம்.

121. ந்ருஸிம்ஹாய நம:

நரஸிம்ஹமமே நமஸ்காரம்.

122. பீஷணாய நம:

காண்போர் கலங்கும் கம்பீரமே நமஸ்காரம். (நரஸிம்ஹ அவதாரம்)

123. பத்ராய நம:

மங்கள மூர்த்தியே நமஸ்காரம்.

124. ம்ருத்யு ம்ருத்யவே நம:

காலகாலாதியே நமஸ்காரம்.

125. ஸநாதனாய நம:

சநாதனவாதியே நமஸ்காரம்.

126. ஸபா - ஸ்தம் போத்பவாய நம:

சபையை ஸ்தம்பிக்க செய்பவரே நமஸ்காரம். (சபையை பெருமாள் திகைத்து ஸ்தம்பிக்க செய்தது இரண்டு தடவை. ஒன்று பாஞ்சாலிக்கு வஸ்திரம் தந்த போது, இரண்டாவது தூணைப் பிளந்து வந்து இரண்யவதம் செய்த போது, ஸ்தம்பத்திலிருந்து உத்பவமானது. தூணிலிருந்து வெளிப்பட்டதையே குறிக்கின்றது.

127. பீமாய நம:

அச்சுறுத்துபவரே நமஸ்காரம்.

128. சிரோதாரிணே நம:

(இரண்யனின்) சிரமறுத்தவரே நமஸ்காரம்.

129. மஹேஸ்வராய நம:

மகேஸ்வரரே நமஸ்காரம்.

130. த்வாதசாதித்ய சூடாலாய நம:

பன்னிரண்டு ஆதித்யர்களான துவாதச ஆதித்யர்களை ஆபரணமாக கொண்டவரே நமஸ்காரம்.

131. கல்ப்ப தாமக்ஷபச்சவயே நம:

யுகமுடிவிலும் ஒளிரக்கூடிய பேரொளியே நமஸ்காரம்.

132. ஹிரண்ய கோரஸ்தல பின்னநகாய நம:

இரண்யனை தன் நகத்தால் கிழித்தெறிந்தவரே நமஸ்காரம்.

133. ஸிம்ஹ முகாய நம:

சிம்ம முகத்தவரே நமஸ்காரம்.

134. மஹதே நம:

மகானே நமஸ்காரம். மகிமை பொருந்தியவரே நமஸ்காரம்.

135. ப்ரஹ்லாத வராய நம:

பக்த பிரகல்லாதனுக்கு வரம் அருளியவரே நமஸ்காரம்.

136. தீமதே நம:

மகாஞானியே நமஸ்காரம்.

137. பக்த சங்கப்ரதிஷ்டிதாய நம:

பக்தர் கூட்டத்தால் வணங்கப் பெறுபவரே நமஸ்காரம். (பாலாஜி)

138. ப்ருஹம் ருத்ராதி ஸம் ஸேவ்யாய நம:

பிரும்மனாலும் ருத்ரனாலும் பூஜிக்கப்படுபவரே நமஸ்காரம்.

139. ஸித்த ஸாத்யப்ரபூஜிதாய நம:

சித்தர்களும் சாதுக்களும் சதா சர்வகாலமும் வணங்கும் பெருமானே நமஸ்காரம்.

140. லக்ஷ்மீ ந்ருஸிம்ஹாய நம:

லக்ஷ்மீ நரசிம்மரே நமஸ்காரம்.

141. தேவேசாய நம:

தேவதேவாதிகளின் ஈஸ்வரரே நமஸ்காரம்.

142. ஜ்வாலாஸிம்ஹாய நம:

அக்னி ஜ்வாலை வீசும் ஸிம்ஹரூபியே நமஸ்காரம்.

143. அந்த்ரமாலிகாய நம:

இரண்யவதத்தில் அவன் எலும்புகளை மாலையாக அணிந்தவரே நமஸ்காரம்.

144. கட்கினே நம:

கட்கம் (கத்தி) தரித்தவரே நமஸ்காரம்.

145. கேடினே நம:

கேடயம் தரித்தவரே நமஸ்காரம்.

146. மஹேஷ்வாஸினே நம:

சக்தி வாய்ந்த அஸ்திரங்களை உடையவரே நமஸ்காரம்.

147. கபாலினே நம:

கபாலம் கையில் ஏந்தும் கபாலியே நமஸ்காரம்.

148. முஸலினே நம:

பூமாதேவியை கைகளில் தாங்குபவரே நமஸ்காரம்.

149. ஹலினே நம:

கலப்பையை கைகளில் கொண்டவரே நமஸ்காரம்.

150. பாஸினே நம:

பாசக்கயிறை கையில் வைத்திருப்பவரே நமஸ்காரம்.

151. சூலினே நம:

திரிசூலம் கொண்டவரே நமஸ்காரம்.

152. மஹாபாஹவே நம:

நீண்ட கைகளை உடையவரே நமஸ்காரம்.

153. ஜ்வரக்நாய நம:

ஜ்வரதாபம் போக்குபவரே நமஸ்காரம்.

154. ரோகலுண்டநாய ரம:

ரோகங்களை தீர்ப்பவரே நமஸ்காரம்.

155. மௌஞ்சீயுஜே நம:

மௌஞ்சம் என்ற தர்பையாலான பவித்ரதாரியே நமஸ்காரம்.

156. சத்ரிகாய நம:

சத்ரியென்ற குடை பிடித்தவரே நமஸ்காரம்.

157. தண்டினே நம:

தண்டம் ஏந்தியவனே நமஸ்காரம்.

158. கிருஷ்ணாஜினதராய நம:

மால்தோல் போர்த்தியவரே நமஸ்காரம்.

159. வடவே நம:

(வடு) குழந்தையானவரே நமஸ்காரம்.

160. அதீத வேதாய நம:

அளவிலடங்கா வேதமுணர்ந்த வேதநாராயணனே நமஸ்காரம்.

161. வேதாந்தோத்ராயகாய நம:

வேதாந்த சொரூபியே நமஸ்காரம்.

162. பிரம்ம வேஷகாய நம:

பிராம்மண வேஷமிட்டவரே நமஸ்காரம்.

163. அசூன்ய சயனப்ரீதாய நம:

சூன்யமற்ற சந்தடி சத்தமுள்ள இடத்தில் சயனித்திருப்பதில் விருப்பமுடையவரே நமஸ்காரம்.

164. அதிதேயாய நம:

முதல் புருஷரே நமஸ்காரம். அதிதியாக வந்தவரே நமஸ்காரம்.

165. அனகாய நம:

தோஷமற்ற நிர்தோஷியே நமஸ்காரம்.

166. ஹரயே நம:

ஹரனே நமஸ்காரம்.

167. ஸம்பத்தாய நம:

சகல ஸம்பத்தும் தானாகயிருப்பவரே நமஸ்காரம்.

168. ஸாம வேதயாய நம:

ஸாமவேதியே நமஸ்காரம். (ஹிதோபதேசம் செய்து நல்வழிப்படுத்தும் குணங்கொண்டவர் பகவான்.)

169. பலிவேஷ்ம ப்ரபூஜிதாய நம:

பலிச்சக்கரவர்த்தியால் ஆராதிக்கப்பட்ட பெருமாளே நமஸ்காரம்.

170. பலிக்க்ஷாலித பாதாப்ஜாய நம:

பலிசக்ரவர்த்தியால் பாதபூஜை செய்யப்பட்டவரே நமஸ்காரம்.

171. விந்த்யாவலி விமானிதாய நம:

விந்த்யாவலியால் (பலியின் மனைவி) பூஜிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

172. த்ரிபாத பூமிஸ்வீகந்த்ரே நம:

மூன்றடிக்குள் பூலோகத்தை தனதாக்கிக் கொண்டவரே நமஸ்காரம்.

173. விஸ்வரூப ப்ரதர்சகாய நம:

விஸ்வரூபியே நமஸ்காரம்.

174. தீர்க்காய நம:

தீர்க்கமானவரே மிக மிக உயர்ந்து நீண்டவரே நமஸ்காரம்.

175. த்ரி விக்ரமாய நம:

த்ரிவிக்ர சொரூபியே நமஸ்காரம். (மூன்று உலகிலும் வியாபித்தவர்)

176. ஸ்வாங்ரி நக பின்னாண்ட கர்ப்பராய நம:

தனது கால்நகத்தால் பூமியை பிளந்து அதன்

கர்ப்பத்திலிருந்த இன்னொரு பூமியையெடுத்து மஹாபலிக்கு புவனமளித்தவரே நமஸ்காரம். (தன் கை நகங்களால் கீறி இரண்யனை வதம் செய்த பெருமாளே கால் நகத்தால் பூமியை பிளந்து பலிக்கு உலகம் தந்தாராம்.)

177. பஜ்ஜாத வாஹினீதாரா பவித்ரிதா ஜகத்ரயாய நம:

தன் பாததுளி ஜலத்தால் மூவுலகையும் பவித்ரமாக்கியவரே நமஸ்காரம்.

178. விதி ஸம்மானிதாயே நம:

பிரம்மனால் பெருமைப்படுத்தப்பட்டவரே நமஸ்காரம்.

179. புண்யாய நம:

பாபநாசம் செய்து புண்ணியத்தை தழைத்தோங்கச் செய்தவரே நமஸ்காரம்.

180. தைத்ய யோர்த்ரே நம:

ராக்ஷஸர்களுடன் போரிட்டவரே நமஸ்காரம்.

181. ஜயோர்ஜிதாய நம:

ஜெயத்தை ஊர்ஜிதம் செய்தவரே நமஸ்காரம்.

182. ஸுரராஜ்யப்ரதாய நம:

(அசுரர்களை அழித்து சுரர்களுக்கு) தேவர்களுக்கு மீண்டும் ராஜ்யமளித்தவரே நமஸ்காரம்.

183. சுக்ர மத ஹ்ருதே நம:

சுக்ரனை கர்வபங்கம் செய்தவரே நமஸ்காரம்.

184. ஸுஜகத் பித்ரே நம:

பாவமொழிந்த புண்ணிய லோகத்தின் பிதாவே நமஸ்காரம்.

185. ஜாமத்கன்யாய நம:

ஜமத்கனி புத்திரனாக உதித்தவரே நமஸ்காரம்.

186. குடாரிணே நம:

ஏற்காலை தரித்தவரே நமஸ்காரம்.

187. கார்த்த வீர்ய விதாரணாய நம:

கார்த்த வீர்யார்ஜுனனை கதிகலங்க வைத்தவரே நமஸ்காரம்.

188. ரேணுகா கண்ட்ட ஹரனாய நம:

ரேணுகா தேவியின் சிரத்தை அறுத்தவரே நமஸ்காரம் (பரசுராமர்)

189. துஷ்ட க்ஷத்ரியகாதுகாய நம:

க்ஷத்ரிய வம்சத்துதித்த கொடியவர்களை அழித்தவரே நமஸ்காரம்.

190. வர்ச்சஸ்வினே நம:

வெற்றியின் லட்சணமே நமஸ்காரம்.

191. தானசீலாய நம:

தானத்தில் உயர்ந்த வள்ளலே நமஸ்காரம்.

192. தனுஷ்மதே நம:

வில்வீர லட்சணமே நமஸ்காரம்

193. பஹு வித்தமாய நம:

பேரறிஞனாக விளங்குபவரே நமஸ்காரம்.

194. அத்யுதக்ராய நம:

எதிலும் முதலாவதாக இருப்பவரே நமஸ்காரம்.

195. சமக்ராய நம:

சர்வ சமர்த்தரே நமஸ்காரம்.

196. ந்யக்ரோதாய நம:

தயார் நிலையிலிருப்பவரே நமஸ்காரம். "He is always Just"

197. துஷ்டநிக்ரஹாய நம:

துஷ்ட நிக்ரஹம் செய்பவரே நமஸ்காரம்.

198. ரவிவம்ஸ ஸமுத்பூதாய நம:

சூர்ய வம்சத்தில் பிறந்தவரே நமஸ்காரம்.

199. ராகவாய நம:

ராகவனே நமஸ்காரம்.

200. பரதாக்ரஜாய நம:

பரதனின் அண்ணனாக அவதரித்தவரே நமஸ்காரம்.

201. கௌஸல்யா தனயாய நம:

கோசலை மகனாக அவதரித்தவரே நமஸ்காரம்.

202. ராமாய நம:

ஸ்ரீராமாவதாரமே நமஸ்காரம்.

203. விஸ்வாமித்ர ப்ரியங்கராய நம:

விஸ்வாமித்திரரின் அன்புக்கு பாத்திரமானவரே நமஸ்காரம்.

204. தாடகாரயே நம:

தாடகையை வதம் செய்தவரே நமஸ்காரம்.

205. ஸுபாஹுக்நாய நம:

ஸுபாகுவை அழித்தவரே நமஸ்காரம்.

206. பலாதிபல மந்த்ரவதே நம:

பலம், மாபெரும் மந்திர பலமுள்ளவரே நமஸ்காரம்.

207. அகல்யாசாப விச்சேதினே நம:

அகலிகைக்கு சாபவிமோசனமளித்தவரே நமஸ்காரம்.

208. ப்ரவிஷ்ட ஜனகாலயாய நம:

ஜனகாபுரிக்கு விஜயம் செய்தவரே நமஸ்காரம். (மிதிலையே ஜனகாபுரி. ஜனகர் ஆண்ட தேசம்.)

209. ஸ்வயம்வர ஸபா ஸப்யாய நம:

சுயம்வர சபைக்குள் அழைத்துச் செல்லப்பட்ட பெருமானே நமஸ்காரம்.

210. சிவச்சாய ப்ரபஞ்சனாய நம:

சிவதனுசுவை உடைத்தவரே நமஸ்காரம்.

211. ஜானகீ பரிணேத்ரே நம:

ஜானகியை மணந்தவரே நமஸ்காரம்.

212. ஜனகாதீச ஸம்ப்ரமாய நம:

ஜனகபுரியோரை ஆகர்ஷித்தவரே நமஸ்காரம்.

213. ஜமதக்னி தனூஜாத யோத்ரே நம:

ஜமதக்னியின் குமாரன் பரசுராமனுடன் போரிட்டவரே நமஸ்காரம்.

214. யோதாதி பாக்ரண்யே நம:

யுத்த பராக்ரமசாலிகளில் முதன்மையானவரே நமஸ்காரம்.

215. பித்ருவாக்ய ப்ரதீ பாலாய நம:

தந்தை சொல் மிக்க மந்திரமில்லாதவரே நமஸ்காரம்.

216. த்யக்த ராஜ்யாய நம:

ராஜபோகத்தை தியாகம் செய்தவரே நமஸ்காரம்.

217. ஸ:லக்ஷ்மணாய நம:

லக்ஷ்மணனை சதாசர்வ காலமும் உடன் வைத்துக் கொண்டவரே நமஸ்காரம்.

218. ஸ: ஸீதாய நம:

சீதாராமனாகவேயிருந்தவரே நமஸ்காரம்.

219. சித்ர கூடஸ்தாய நம:

சித்ரகூடத்திற்கு வருகை புரிந்தவரே நமஸ்காரம். (சித்தர் கூடம் என்பதே சித்ரகூடம். தவயோகிகள் தவமிருக்க தங்கும் இடம். இன்றுமுள்ளது. மாபெரும் உருவ,அருவ, தரிசன, நிதர்சன, சுதர்சன தபஸ்விகள் அங்கு உள்ளனர். H.H. சிவசங்கரா செல்லுமிடம். அவரை கேட்டால் ''சித்ரகூட விசித்ரம்'' வெளிப்படும்.)

220. பரதாஹித ராஜ்யகாய நம:

பரதனிடம் அரியணை தந்தவரே நமஸ்காரம். (பாதுகா சஹஸ்ரம் என்ற ''பாதுகை ஆயிரம்'' ஸ்லோக வருணனையில் அறியாத மிகப் புதிய அரிய விஷயங்களை காணலாம்)

221. காகதர்ப்ப ப்ரஹார்த்ரே நம:

காகத்தை தண்டித்தவரே நமஸ்காரம். (சீதையை உபத்ரவம் செய்தான் காகத்தின் உருவில் ஒரு அசுரன் என்பது சம்பவம்)

222. தண்டகாரண்ய வாஸகாய நம:

தண்டகாரண்ய வனத்தில் வாசத்தை துவங்கியவரே நமஸ்காரம்.

223. பஞ்சவட்யாம் விஹாரிணே நம:

பஞ்சவடி தீரத்திலும் வசித்தவரே நமஸ்காரம்.

224. ஸ்வதர்வ பரிபோஷகாய நம:

சுதர்மத்தை கடைப்பிடித்தவரே நமஸ்காரம்.

225. விராதக்னே நம:

விராடனை வென்றவரே நமஸ்காரம்.

226. அகஸ்த்ய முக்ய முனிஸம்மானிதாய நம:

அகத்தியரை தலைமையாகக் கொண்ட முனிஸ்ரேஷ்டர்களை கௌரவித்தவரே நமஸ்காரம்.

227. பும்ஸே நம:

மனிதருள் மாணிக்கமே புருஷோத்தமனே நமஸ்காரம்.

228. சண்டசாபதரா்ய நம:

கோதண்டபாணியே நமஸ்காரம்.

229. கட்கதராய நம:

சக்திபடைத்த வாளைக் கொண்டவரே நமஸ்காரம்.

230. அக்ஷய ஸாயகாய நம:

அளவிலடங்கா சக்தியுள்ள அஸ்திரங்களை கொண்டவரே நமஸ்காரம்.

231. கராந்தகாய நம:

கரனை அழித்தவரே நமஸ்காரம்.

232. தூஷணாரயே நம:

தூஷணனை கொன்றவரே நமஸ்காரம்.

233. த்ரிசிரஸ்கரிபவே நம:

திரிசிரன் எனும் அரக்கனை அழித்தவரே நமஸ்காரம்.

234. வ்ரிக்ஷாய நம:

இந்திரனை மிஞ்சிய அஸுர சம்ஹாரியே நமஸ்காரம். ரிஷபவடிவே நமஸ்காரம்.

235. சூர்ப்பணகா நாஸாச்சேத்ரே நம:

சூர்ப்பனகையின் நாசியை அறுத்தவரே நமஸ்காரம்.

236. வல்கல தாரகாய நம:

மரஉரி தரித்தவரே நமஸ்காரம்.

237. ஜடாவதே நம:

ஜடாமுடியோனே நமஸ்காரம்.

238. பர்ணசாலாஸ்தாயே நம:

பர்ணசாலை குடிலில் வசித்தவரே நமஸ்காரம்.

239. மாரீசக்னாய நம:

மாரீச வதம் செய்தவரே நமஸ்காரம்.

240. பலோத்கடாய நம:

பாஹுபலசாலியே நமஸ்காரம்.

241. பக்ஷிராட்க்ருத ஸம்வாதய நம:

ஜடாயுவான பக்ஷிராஜனோடு சம்பாஷித்தவரே நமஸ்காரம்.

242. ரவி தேஜஸே நம:

சூர்ய ஒளியே நமஸ்காரம்.

243. மஹாபலாய நம:

பராக்ரமசாலியே நமஸ்காரம்.

244. ஸபர் யாஸீத பல புஜே நம:

சபரிதந்த கனிகளை உண்டவரே நமஸ்காரம்.

245. ஹனூமத் பரிதோஷகாய நம:

ஹனுமனுக்கு அனுக்ரகம் செய்தவரே நமஸ்காரம். (108 உபநிஷத்தும் ராமரால் அனுமனுக்கு உபதேசிக்கப்பட்டது)

246. சுக்ரீவாபயதாய நம:

சுக்ரீவனுக்கு அபயமளித்தவரே நமஸ்காரம்.

247. தைத்யகாயக்ஷ பாஸுராய நம:

அசுரனை உதைத்து வீசி தன் வலிமையை காட்டியவரே நமஸ்காரம்.

248. சப்தால ஸமாக்னாய நம:

ஒரே முறை ஏவிய ஒரே பாணத்தை ஏழு மரங்களைத் துளைத்துக் கொண்டு செல்ல வைத்தவரே நமஸ்காரம்.

249. வாலி ஹ்ருதே நம:

வாலி வதஞ்செய்தவரே நமஸ்காரம். (வாலியின் ஹ்ருதயத்திலும் இருந்தவரே நமஸ்காரம் எனவும் கொள்ளலாம்).

250. கபிஸம்மதாய நம:

வானரர் வழிபட்ட பிரானே நமஸ்காரம்.

251. வாயுஸூனுக்ருதா ஸேவாய நம:

வாயு குமாரனால் ஸேவார்த்தி செய்யப்பட்டவரே நமஸ்காரம்.

252. த்யக்த பம்பாய நம:

பம்பா நதி தீரத்தை விட்டு சென்றவரே நமஸ்காரம்.

253. குசாஸனாய நம:

தர்பாசனத்தில் வீற்றிருப்பவரே நமஸ்காரம்.

254. உதன்வத் தீரகாய நம:

கடலைத் தாண்டிய கரைகண்டவரே நமஸ்காரம்.

255. சூராய நம:

சூரனாக ஜ்வலிப்பவரே நமஸ்காரம்.

256. விபீஷண வரப்ரதாய நம:

விபீஷணனுக்கு வரதானம் செய்தவரே நமஸ்காரம்.

257. ஸேதுக்ருதே நம:

ஸேது அணை போட்டவரே நமஸ்காரம்.

258. தைத்யக்னே நம:

ராட்க்ஷஸர்களை அழித்த ரட்சகனே நமஸ்காரம்.

259. ப்ரப்தலங்காய நம:

இராவணனை அழிக்க லங்காபுரியை அடைந்தவரே நமஸ்காரம்.

260. அலங்காரவதே நம:

அலங்கார ப்பிரியரே நமஸ்காரம். (இன்னொரு பொருள்) லங்காபுரியை அழித்து ராட்க்ஷஸர்களை கதற வைத்தவரே நமஸ்காரம்.

261. அதிகாய பலோத் ஸாரிணே நம:

அதிகாயனை அழித்தவரே நமஸ்காரம்.

262. கும்பகர்ண விமந்தநாய நம:

கும்பகர்ணனை வதம் செய்தவரே நமஸ்காரம்.

263. தஸகண்ட சிர: கண்டினே நம:

ராவணனின் பத்து தலைகளை அறுத்தவரே நமஸ்காரம்.

264. ஜாம்பவத் ப்ரமுகாந்தாய நம:

ஜாம்பவான் போன்ற ப்ரமுகர்களால் பாராட்டப்பட்டவரே நமஸ்காரம்.

265. ஜானகீசாய நம:

ஜானகீயை மீட்டவரும் ஜானகி ஈசனாக இருப்பவருமே நமஸ்காரம்.

266. ஸீராத்யக்ஷாய நம:

தேவர்கள் வணங்கும் தெய்வமே நமஸ்காரம்.

267. ஸாகேதேசாய நம:

அயோத்தி ராமனே நமஸ்காரம்.

268. புராதனாய நம:

பழமையின் பெருமையே நமஸ்காரம்.

269. புண்ய ஸ்லோகாய நம:

புண்ணியந்தரும் ஸ்லோகமாக இருப்பவரே நமஸ்காரம்.

270. வேத வேத்யாய நம:

வேதங்களால் அறியப்பட்ட வேதநாராயணனே வேதாசலமே நமஸ்காரம்.

271. ஸ்வாமி தீர்த்த நிவாஸகாய நம:

ஸ்வாமி தீர்த்தத்தை தன் வாசஸ்தலமாக கொண்ட திருமலை வாசனே நமஸ்காரம்.

272. லக்ஷ்மீ ஸர: கேலி லோலாய நம:

லக்ஷ்மீ, சரஸ் தீர்த்தத்தில் நீராடி மகிழும் தீர்த்தாரப்பனே நமஸ்காரம்.

273. லக்ஷ்மீசாய நம:

லக்ஷ்மீ பதியே நமஸ்காரம்.

274. லோகரக்ஷணாய நம:

உலகநாதனே நமஸ்காரம்.

275. தேவகீ கர்ப்ப ஸம்பூதாய நம:

தேவகீயின் கர்ப்பத்தில் உதித்தவரே. தேவகீமைந்தா நமஸ்காரம்.

276. யசோதாக்ஷண லாலிதாய நம:

யசோதையால் வளர்க்கப்பட்டவரே நமஸ்காரம்.

277. வாஸுதேவ க்ருத ஸ்தோத்ராய நம:

வஸுதேவரால் துதிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

278. நந்தகோப மனோஹராய நம:

நந்தகோபனின் மனதிலிருப்பவரே நமஸ்காரம்.

279. சதுர்புஜாய நம:

நான்கு கைளையுடையவரே நமஸ்காரம்.

280. கோமங்காய நம:

தாமரை போன்றவரே நமஸ்காரம்.

281. கடாவதே நம:

கலசரூபியே நமஸ்காரம்.

282. நீல குந்தலாய நம:

நீலநிற சிகாமணியே நமஸ்காரம்.

283. பூதனா ப்ராண ஹ்ரித்கந்த ரே நம:

தன்னை விஷமிட்டு கொல்ல வந்த பூதகியை கொன்றவரே நமஸ்காரம்.

284. த்ருணா வார்தா ஸுரா ஸநயே நம:

த்ருணாவார்தன் எனும் அசுரனை கொன்றவரே நமஸ்காரம்.

285. கர்காரோ(ப) திந்நாமாங்காய நம:

கர்க்க முனிவரால் பெயர் சூட்டப்பட்டவரே நமஸ்காரம்.

286. வாஸுதேவாய நம:

வாஸுதேவரே நமஸ்காரம்.

287. அதோக்ஷஜாய நம:

கீழ்நோக்கிய பார்வை உடையவரே நமஸ்காரம்.

288. கோபிகாஸ்தன்ய பானினே நம:

கோபிகையிடம் தாய்ப் பால் பருகியவரே நமஸ்காரம்.

289. பலபத்ரானுஜாய நம:

பலராமரின் தம்பியானவரே நமஸ்காரம்.

290. அச்யுதாய(ன) நம:

மாறாத, மாற்றமில்லாத, மாற்ற முடியாத சாஸ்வதமே அச்யுதாயனனே நமஸ்காரம்.

291. வ்யாக்ராங்குலிஜ பூஷாய நம:

புலிநக பூஷணமணிந்தவரே நமஸ்காரம்.

292. வத்ஸஜிதே நம:

கன்றுக்குட்டி ரூபத்தில் வந்த அசுரனைக் கொன்றவரே நமஸ்காரம்.

293. வத்ஸபந்தனாய நம:

பசுக்களையும் கன்றுகளையும் பாசத்தால் தன்னோடு பிணைத்த கோகுல கிருஷ்ணரே நமஸ்காரம்.

294. க்ஷீரஸாராஸனாய நம:

பாலினுள் வெண்ணையாயிருப்பவரே நமஸ்காரம்.

295. கிருஷ்ணாய நம:

ஸ்ரீகிருஷ்ணா நமஸ்காரம்.

296. ததிபாண்ட ப்ரபேதகாய நம:

தாழியை உடைத்த தாமோதரா நமஸ்காரம்.

297. நவநீதா பஹர்த்ரே நம:

வெண்ணை திருடித் தின்ற நவநீதகிருஷ்ணனே நமஸ்காரம்.

298. நீலநீரத பாஸுராய நம:

நீலமேக ஸ்யாமளனே நமஸ்காரம்.

299. ஆபீர வைஸ்ய ஜாதீயவிலோ

மைர்லலிதாநநாய நம:

கோபிகா கிருஷ்ணனே ஆயர்பாடி கோகுலவாசனே நமஸ்காரம்.

300. மாத்ரு தாசித விஸ்வாசாய நம:

தாய்க்குள் தன்னையும் அவளுக்கு தன்னையும் நிதர்சன தரிசனம் தந்த திரிகால ஞானியே நமஸ்காரம். (கண்ணன் எல்லா லீலைகளையும் தாயிடம் காட்டி, வாயைத் திறந்து உலகங்களை காட்டி தரிசிக்க செய்தவர்)

301. உலூகல நிபந்தனாய நம:

உரலில் கட்டப்பட்டவரே நமஸ்காரம்.

302. நளகூபர ஸாபந்தாய நம:

நளகூபர, மணிக்ரீவர்களை சாபம் விமோசனமாக்கி (மரமானவர்களை) அருளிய பரமனே நமஸ்காரம்.

303. கோதூளிச்சரிதாலகாய நம:

''கோதூளி'' அலங்காரமுள்ள கோபாலா நமஸ்காரம்.

304. கோ சங்க ரக்ஷகாய நம:

கோஸ்வாமியே நமஸ்காரம்.

305. ஸ்ரீசாய நம:

ஸ்ரீநிவாசரே நமஸ்காரம்.

306. பிருந்தாரண்ய விஹாரணாய நம:

பிருந்தாவன வாசத்தில் பிரியமுள்ள துளசிநாதா நமஸ்காரம்.

307. வத்ஸாந்தகாய நம:

வத்ஸனை அழித்த ஸ்ரீவத்ஸரே நமஸ்காரம்.

308. பகத்வேஷிணே நம:

பகாசுரனை எதிர்த்தவரே நமஸ்காரம்.

309. தைத்யாம்புத மஹாநிலாய நம:

அசுர சமுத்ரத்தின் காலாக்னியே நமஸ்காரம்.

310. மஹா ஜகர சண்டாக்னயே நம:

சம்சாரத்தில் தீயவர்களின் தீயாக விளங்கும் திருமலைவாசா நமஸ்காரம்.

311. சகட ப்ராண ஸங்கடாய நம:

சகடாசுரனை வதம் செய்தவரே நமஸ்காரம்.

312. இந்த்ர ஸேவ்யாய நம:

இந்திரனால் ஸேவிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

313. புண்ய காத்ராய நம:

திடகாத்ரமானவரே நமஸ்காரம்.

314. கரஜிதே நம:

கரனை வென்றவரே நமஸ்காரம்.

315. சண்ட தீதிதயே நம:

அக்னிஜோதியானவரே நமஸ்காரம்.

316. தாள பக்வ பலாசினே நம:

பனம் நொங்கு மீது ப்ரீதி உடையவரே நமஸ்காரம்.

317. காளீயபணி தர்பக்னே நம:

காளிங்கனென்ற பாம்பை கொன்றவரே நந்தனகிருஷ்ணா நமஸ்காரம்.

318. நாகபத்னி ஸ்துதிப்ரீதாய நம:

நாக பத்தினிகளின் துதிகளால் ப்ரீதியடைந்து அருள் செய்தவரே நமஸ்காரம்.

319. ப்ரலம்பாஸுர கண்டனாய நம:

ப்ரலம்பாஸுர வதம் செய்தவரே நமஸ்காரம்.

320. தாவாக்னிபய சம்ஹாரிணே நம:

காட்டுத்தீயை கட்டுப்படுத்தி கவலையை போக்கிய காருண்யமே நமஸ்காரம்.

321. பலாஹாரிணே நம:

கனிகளை கவர்ந்த கள்வரே நமஸ்காரம்.

322. கதாக்ரஜாய நம:

முதலில் நின்றுகொண்டிருக்கும் முகுந்தா நமஸ்காரம்.

323. கோபாங்கநா சேல சோராய நம:

கோபிகாஸ்திரீகளின் வஸ்திரத்தை ஒளித்து வைத்தவரே நமஸ்காரம்.

324. பாதோ லீலா விசக்ஷனாய நம:

கோபிகைகளின் தவிப்பில் லீலைகளை காட்டிய லீலாவினோதனே நமஸ்காரம்.

325. வம்ஸ கான ப்ரவீணாய நம:

புல்லாங்குழலூதும் புருஷோத்தமனே நமஸ்காரம்.

326. கோபீ ஹஸ்தாம் புதர்ச்சிதாய நம:

தாமரைக் கைகளை கூப்பி கோபிகைகள் பூஜித்த கோபிகா கிருஷ்ணா நமஸ்காரம்.

327. முனிபத்னியாஹ்ருத ஹராய நம:

முனி பத்தினிகள் தந்த பழங்களை பிரசாதமாக ஏற்றவரே நமஸ்காரம்.

328. முனிஸ்ரேஷ்டாய நம:

முனிஸ்ரேஷ்டரே நமஸ்காரம்.

329. முனிப்ரியாய நம:

முனிவர்கள் விரும்பும் முரளியே நமஸ்காரம்.

330. கோவர்தனகிரி ஸந்தாத்ரே நம:

கோவர்தன கிரியை குடையாகப் பிடித்த கோவர்தனனே நமஸ்காரம்.

331. ஸங்கிரந்தன தமாபஹாய நம:

இந்திரன் யாதவர்கட்கேற்படுத்திய இருளைப் போக்கியவரே நமஸ்காரம்.

332. ஸதுத்யான விஸாலாய நம:

நந்தவனங்களில் ஆடி மகிழ்ந்த நந்தகோபாலா நமஸ்காரம்.

333. ராஸக்ரீட பராயணாய நம:

ராஸ லீலாவில் கோபிகைகளும் கூடி விளையாடிய கோபிகா கிருஷ்ணா நமஸ்காரம்.

334. தருண்யப்யர்ச்சிதாய நம:

தருணி (யுவதி)யால் அர்ச்சிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

335. கோபிப்ரார்த்திதாய நம:

கோபிகள் போற்றும் கோபாலா நமஸ்காரம்.

336. புருஷோத்தமாய நம:

புருஷோத்தனே நமஸ்காரம்.

337. அக்ரூரஸ்துதிஸம்ப்ரீதாய நம:

அக்ரூரனின் பூஜையில் ப்ரீதியடைந்தவரே நமஸ்காரம்.

338. குப்ஜாயௌவ தாயகாய நம:

கூனியவர்களை குணமாக்கி யௌவனமளித்த பெருமானே நமஸ்காரம்.

339. முஷ்டிகோரப்ஹாரிணே நம:

மல்யுத்த வீர மல்லரே நமஸ்காரம்.

340. சாணூரோதர தாரணாய நம:

சாணூரன் என்ற மல்லனை கீழே வீசி வயிற்றை பிளந்தவரே நமஸ்காரம்.

341. மல்லயுத்தாக்ரகண்யாய நம:

மல்லர்களின் முதல்வரே நமஸ்காரம்.

342. பித்ருபந்தன மோசனாய நம:

தந்தையின் சிறைவாசம் மீட்டவரே நமஸ்காரம்.

343. மத்தமாதங்க பஞ்சாஸ்யாய நம:

மதயானையை அடக்கியவரே நமஸ்காரம்.

344. கம்ஸக் நீவாளிக்ருந்தனாய நம:

கம்ஸன் குரல்வளையை நெறித்துக் கொன்ற கடவுளே நமஸ்காரம்.

345. உக்ரசேன பிரதிஷ்டாத்ரே நம:

பாட்டனார் உக்ரசேனனை அரியணை அமர்த்திய உன்னதனே நமஸ்காரம்.

346. ரத்னஸிம்ஹாஸனஸ்திதாயை நம:

ரத்தின சிம்மாசனத்தில் அமர்ந்தவரே நமஸ்காரம்

347. காலநாம பலித்வேஷிணே நம:

காலயவ்வனனென்ற எதிரியின் எதிரியாக கருதப்பட்டவரே நமஸ்காரம்.

348. முசுகுந்த வரப்ரதாய நம:

முசுகுந்தனுக்கு வரமளித்த முகுந்தனே நமஸ்காரம்.

349. ஸால்வஸேவிததுர்தர்ஷ ராஜஸ்மய நிவாரணய நம:

சால்வன் ஜராசந்தனால் அவதிப்பட்டவர்களை காக்க ஜராசந்தனை கூண்டோடு ஒழித்த ஜனார்தனனே நமஸ்காரம்.

350. ருக்மிணி கர்வாபஹாரிணே நம:

ருக்மிணியின் கர்வத்தை பங்கம் செய்து உணர வைத்தவரே நமஸ்காரம்.

351. ருக்மிணி நயனோ த்ஸவாய நம:

ருக்மிணியின் கண்களுக்கு விருந்தாக விளங்குபவரே நமஸ்காரம்.

352. ப்ரத்யும்ன ஜனகாய நம:

ப்ரத்யும்னனின் தந்தையே நமஸ்காரம்.

353. காமாய நம:

பிரேமை சொரூபியே நமஸ்காரம்.

354. ப்ரத்யும்னாய நம:

ப்ரத்யும்னனும் அவரே எனக் கொண்டு நமஸ்கரிக்கிறோம், நமஸ்காரம்.

355. த்வாரகாபதயே நம:

துவாரகாதிபதியே நமஸ்காரம்.

356. மணிஹறந்த்ரே நம:

ஸ்யமந்தக மணியை கவர்ந்தவரே நமஸ்காரம்.

357. மஹாமாயாய நம:

மஹாமாயையான ஆதிசக்தியும் நீரே... நமஸ்காரம்.

358. ஜாம்பவத்க்ருத சங்கராய நம:

ஜாம்பவானுடன் சண்டையிட்டவரே நமஸ்காரம்.

359. ஜாம்பூனதாம்பரதாராய நம:

சொர்ணத்தால் ஆடை அலங்காரம் கொண்டவரே நமஸ்காரம்.

360. கம்யாய நம:

நாடுவோருக்கு உடனே நல்வழி காட்டும் நல்லவரே நமஸ்காரம்.

361. ஜாம்பவதீ விபவே நம:

ஜாம்பவதியை மகிழ்வித்தவரே நமஸ்காரம். (ஜாம்பவதீ-2)

362. ஸத்ரஜித்மான ஸோல்லாசினே நம:

ஸத்ரஜித்தின் மனதில் நிலைத்தவரே நமஸ்காரம்.

363. ஸத்யாஜானயே நம:

ஸத்யபாமாவை மணந்தவரே நமஸ்காரம். (ஸத்யா -3)

364. சுபாவஹாய நம:

சுபத்தின் சொரூபமே நமஸ்காரம்.

365. சததன்வ ஹராய நம:

சததன்வர்களென்ற நூறு வில்வீரர்களை கொன்றவரே நமஸ்காரம்.

366. ஸித்தாய நம:

ஸித்தி பெற்ற சித்திமூர்த்தியே நமஸ்காரம்.

367. பாண்டவப்ரிய கோத்ஸுகாய நம:

பஞ்சபாண்டவர்களுக்கு பணிபுரிவதில் பாசம் கொண்ட பரந்தாமனே நமஸ்காரம்.

368. காளிந்தீப்ரந்திதாராம கேளீகுஞ்சாவதம் ஸகாய நம:

யமுனா நதிக்கரையில் வாழும் காளிந்தியை மணந்து மகிழ்ந்தவரே நமஸ்காரம். (காளிந்தீ -4)

369. மந்தார ஸுமனோ பாஸ்வதே நம:

மந்தாரை மனதிலிருப்பவரே மந்தார மலரே நமஸ்காரம்.

370. சச்சீஸாபீஷ்ட தாயகாய நம:

சச்சீஸாவின் விருப்பத்தை பூர்த்தி செய்தவரே நமஸ்காரம் (சச்சீஸா -5)

371. பத்ராப்ரியாய நம:

சுபத்ரையின் அன்புக்கு பாத்திரமானவரே நமஸ்காரம். (சுபத்ரா -6)

372. ஸுபத்ராய ப்ராத்ரே நம:

சுபத்ரையின் சகோதரே நமஸ்காரம்.

373. நாக்னஜித் விபுவே நம:

நாக்னஜித்தின் மகளான நாக்னஜிதீயை மணந்தவரே நமஸ்காரம்.

374. கிரீடினே நம:

கிரீடம் தரித்தவரே நமஸ்காரம்.

375. குண்டலா கல்பாய நம:

குண்டலமணிந்தவரே நமஸ்காரம்.

376. கல்ப பல்லவ லாலிதா்ய நம:

கற்பக அலங்காரியே நமஸ்காரம்.

377. பைஷ்மீப்ரணய பாஷாவதே நம:

பீஷ்மருடன், அன்பு கலந்து சம்பாஷணை செய்து பழகியவரே நமஸ்காரம்.

378. மித்ரவிந்தாதி பாய நம:

மித்ரவிந்தாவின் அதிபரே நமஸ்காரம். (மித்ரவிந்தா -7)

379. அபயாய நம:

அபயமளிப்பவரே நமஸ்காரம்.

380. ஸ்வமூர்த்தி கேலி ஸம்ப்ரீதாய நம:

தனது விக்ரகத்தை ஆராதிப்பவர்களை அனுகரிக்கும் அன்பரே நமஸ்காரம்.

381. லக்ஷ்மணாதத்த மானஸாய நம:

லக்ஷ்மணதத்தையிடம் மனம் பறிகொடுத்த மணவாளரே நமஸ்காரம். (லக்ஷ்மணாயை -8)

குறிப்பு:

இந்த சஹஸ்ரநாமத்தை படித்து பாராயணம் செய்யும் போது ஸ்லோகம் 351ல் குறிப்பிடப்பட்ட 1.ருக்மிணி ஸ்லோகம் 361ல் குறிப்பிட்ட

2. ஜாம்பவதீ -ஸ்லோகம் 363ல் குறிப்பிட்ட

3. ஸத்யா (ஸத்யபாமா) -ஸ்லோகம் 368ல் குறிப்பிட்ட

4. காளிந்தீ -ஸ்லோகம் 370ல் குறிப்பிட்ட

5. சச்சீலா - ஸ்லோகம் 371ல் குறிப்பிட்ட

6. பத்ரா (சுபத்ரா) -ஸ்லோகம் 378ல் குறிபிட்ட
7. மித்ரவிந்தா -ஸ்லோகம் 381ல் குறிப்பிட்ட.

8. லக்ஷ்மணை

இந்த எட்டு பெயர்களை சொல்லி நம: என கூறவும். கிருஷ்ணரின் அனுக்ரகத்தை இவர்கள் வாங்கித் தருவர் என்பது ஸ்லோக ரகசியம்.

382. ப்ராக்ஜ்யோதிஷாதி போத்பாடினே நம:

நரகாசுரன் என்ற ப்ராக்ஜ்யோதிஷா புர அரசனை கொன்றவரே நமஸ்காரம்.

383. தத்சைன்யாந்தகராய நம:

அவனது (நரகாசுரனது) சைன்யம் முழுவதையும் அழித்தவரே நமஸ்காரம்.

384. த்ருடாய நம:

அசைக்க முடியாத உறுதியானவரே நமஸ்காரம்.

385. பூமிஸ்துதாய நம:

பூமாதேவியால் துதிக்கப்பட்டவரே நமஸ்காரம். (நரகாசுரவதத்திற்காக)

386. பூரிபோகாய நம:

நிறைவு நிலையை கண்ட போகியே நமஸ்காரம்.

387. பூஷணாம்பர ஸம்யுதாய நம:

பீதாம்பரதாரி... பூரண அலங்காரபூஷிதரே நமஸ்காரம்.

388. பஹுராமாக்ருதாஹ்லாதாய நம:

அண்டியவர்களை அரவணைத்து ஆனந்தப்படும் ஜனார்த்தனனே நமஸ்காரம்.

389. கந்தமால்யானு லேபநாய நம:

வாசனாதிரவியம் பூசப்பட்ட தேகமுடையவரே நமஸ்காரம்.

390. நாரத திருஷ்டசரிதாய நம:

நிதர்சன தரிசன சரிதையை நாரதரால் புகழப்பட்டவரே நமஸ்காரம்.

391. தேவேசாய நம:

தேவதேவா நமஸ்காரம்.

392. விஸ்வராஜே நம:

புவனாதிபதியே நமஸ்காரம்.

393. குரவே நம:

லோககுருவே நமஸ்காரம்.

394. பானபாஹுவிராமாய நம:

பாணாசுரனின் கைகளை வெட்டியவரே நமஸ்காரம்.

395. தாபஜ்வர விநாசநாய நம:

ஜ்வரதாபங்களை அழிப்பவரே நமஸ்காரம்.

396. உஷா தர்ஷயித்ரே நம:

உஷையை காத்தவரே நமஸ்காரம்.

397. அவ்யக்தாய நம:

வெளிபார்வைக்கு கண் புலனுக்கு புலனாகாதவரே நமஸ்காரம்.

398. சிவவாக் துஷ்ட மானசாய நம:

சிவவாக்கியத்தால் ப்ரீதி அடைந்தவரே நமஸ்காரம். (சிவ விஷ்ணு அபேதமே கூறப்பட்ட சிவவாக்கியம்)

399. மஹேச ஜ்வர ஸம்ஸ்துத்யாய நம:

சைவத்தால் பாராட்டி பாடப்பட்டவரே நமஸ்காரம்.

400. சீதஜ்வர பயாந்தகாய நம:

சீதளநோயின் பயத்தை தீர்ப்பவரே நமஸ்காரம்.

401. ந்ருக ராஜோத்தாரகாய நம:

ந்ருகனுக்கு சொர்க்கமளித்தவரே நமஸ்காரம்.

402. விவிதாரிச்ச லோத்விக்னாய நம:

உலகை கெடுத்த விவிதனை சம்ஹாரம் செய்தவரே நமஸ்காரம்.

403. பிரஹ்மணேஷு தயாபராய நம:

பிராம்மண்யத்தை முறையாக கடைப்பிடிப்பவரை ரக்ஷிப்பவரே நமஸ்காரம்.

404. ஜராஸந்த பலத்வேஷிணே நம:

ஜராஸந்தனின் மூர்க்க பலத்தை துவேஷித்தவரே நமஸ்காரம்.

405. கேஸி தைத்ய பயங்கராய நம:

கேஸி போன்ற அசுரர்கள் மனதில் பீதியளித்தவரே நமஸ்காரம்.

406. சக்ரிணே நம:

சுதர்சன சக்ரதாரியே நமஸ்காரம்.

407. சைத்யாந்தகாய நம:

சிசுபாலனை வதம் செய்தவரே நமஸ்காரம்.

408. ஸப்யாய நம:

சபையாக, சபாநாயகராக சபையிலிருப்பவரே நமஸ்காரம்.

409. ராஜபந்த விபாடகாய நம:

ராஜதுவேஷம், ராஜகோபம் தீர்ப்பவரே நமஸ்காரம்.

410. ராஜஸூய ஹவிர் போக்த்ரே நம:

ராஜசூய யாக ஹவிர்பாகம் பெறுபவரே நமஸ்காரம்.

411. ஸ்நிக்தாங்காய நம:

தேககாந்தியுடையவரே நமஸ்காரம்.

412. சுபலக்ஷணாய நம:

மங்களகரமானவர் ஸ்ரீனிவாசாய மங்களமே நமஸ்காரம்.

413. தாநாபக்ஷண ஸம்ப்ரீதாய நம:

பருப்பு வகைகளை ப்ரீதியுடன் ஏற்பவரே நமஸ்காரம்.

414. குசேலா பீஷ்டதாய நம:

குசேலரின் மனோபீஷ்டத்தை நிறைவேற்றியவரே நமஸ்காரம்.

415. சர்வாரிக்ன கம்பீராய நம:

சகல சத்ரு நாசகாரணமே நமஸ்காரம்.

416. துரௌபதி மானரக்ஷகாய நம:

துரௌபதியின் மானத்தை காத்தவரே நமஸ்காரம்.

417. பீஷ்மத்யாதாய நம:

பீஷ்மரால் தியானம் செய்யப்பட்டவரே நமஸ்காரம்.

418. பக்தவஸ்யாய நம:

பக்தவத்ஸலனே நமஸ்காரம்.

419. பீம பூஜ்யாய நம:

பீமசேனனால் பூஜை செய்யப்பட்டவரே நமஸ்காரம்.

420. தயாநிதயே நம:

தயாநிதியே நமஸ்காரம்.

421. தந்த வக்த்ர சிரஸ்சேதினே நம:

தந்தவக்த்ரன் எனும் அரக்கனை சிரம் அறுத்தவரே நமஸ்காரம்.

422. கிருஷ்ணாய நம:

தீயதை மனதிலிருந்து விலக்கும் கிருஷ்ணரே நமஸ்காரம்.

423. கிருஷ்ண ஸகாய நம:

கிருஷ்ணனும் அவரே. அவருடன் கூடிய அனைத்தும் அவரே. கிருஷ்ணன் என்ற திவ்ய சொரூபமே ஸ்ரீவேங்கடேசனின் நித்ய சொரூபம். அதற்கு நமஸ்காரம்.

424. ஸ்வராஜே நம:

தனக்கு தானே ராஜனாகவுள்ள ராஜாதிராஜனே நமஸ்காரம்.

425. வைஜயந்தீ ப்ரமோதினே நம:

வைஜயந்திமாலா ரூபமே நமஸ்காரம்.

426. பர்ஹிபர்ஹ விபூஷணாய நம:

மயிலிறகால் அலங்கரிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

427. பாண்ட கௌரவ ஸந்தான காரிணே நம:

பாண்டவ கௌரவர்களை இணைக்க பாடுபட்ட தூதரே நமஸ்காரம்.

428. துஸ்சாஸ நாந்தகாய நம:

துச்சாதனனுக்கு அழிவை தந்தவரே நமஸ்காரம்.

429. புத்தாய நம:

புத்தியே அறிவே நமஸ்காரம். (புத்தியுள்ளவன் புத்தன்)

430. விசுத்தாய நம:

பக்தர்களின் பாவம் போக்கும் தூயவரே நமஸ்காரம்.

431. சர்வஞாய நம:

தர்மமே நமஸ்காரம்.

432. க்ரதுஹிம்ஸ விநிந்தகாய நம:

அக்கிரமக்காரர்களை அழிப்பவரே நமஸ்காரம்

433. த்ரிபுரா ரேர்மான ஹர்த்ரே நம:

பரமேஸ்வரனின் மனத்தையும் மானத்தையும் காத்தவரே நமஸ்காரம்.

434. ஸர்வாவஸ்தா விகாரவதே நம:

எல்லா அவஸ்தை, அல்லல்களும் அவரே. அவர் தருவதே. அவருக்கு நமஸ்காரம்.

435. நிர்விகாராய நம:

ஆனால் அவரே காம க்ரோத லோப, மோஹ விகாரங்களை கடந்த தூயவர். அவருக்கு நமஸ்காரம்.

436. நிர்மமாய நம:

நான் எனதென்ற நிலை கடந்தவரே நமஸ்காரம்.

437. நிராபாஸாய நம:

ஆபாஸமில்லாத புனிதரே நமஸ்காரம்.

438. நிராமயாய நம:

அளவிடமுடியாதவரே நமஸ்காரம்.

439. ஜகன்மோஹக தர்மனே நம:

மாயாலோகமான உலகில் தர்மபரிபாலனம் செய்பவரே நமஸ்காரம்.

440. திக்வஸ்த்ராய நம:

பத்து திக்குகளையும் ஆடையாக அணிந்தவரே நமஸ்காரம்.

441. திக்பதீஸ்வராய நம:

திக்பாலகர்களின் ஈஸ்வரே நமஸ்காரம்.

442. கல்கினே நம:

கல்கி அவதாரமே நமஸ்காரம். (H.H. சிவசங்கராதான் அவர்... என்று குறிப்பிடுகிறேன்).

443. ம்லேச்ச ப்ரஹார்த்ரே நம:

மிலேச்சர்களை அழித்தவரே நமஸ்காரம்.

444. துஷ்ட நிக்ரஹகாரகாய நம:

தீயதையும் தீயவர்களையும் அழிக்க காரணமானவரே நமஸ்காரம். (துஷ்டநிக்ரகம் ஸ்ரீவேங்கடேசாய விக்ரகம்)

445. சாதுர்வர்ன்ய விபாகக்ருதே நம:

நான்கு வருணங்களும் ரட்க்ஷகரே நமஸ்காரம்.

446. தர்மப்ரதிஷ்டா காரிணே நம:

தர்மம் பிரதிஷ்டை செய்யப்பட்ட காரணமாக இருப்பவரே நமஸ்காரம்.

447. யுகாந்தகாய நம:

யுகங்களின் (ஆதியும் அவரே) அந்தமும் அவரே. நமஸ்காரம்.

448. யுகக் ராந்தாய நம:

யுகத்தின் செயல் நிர்ணயமாக இருப்பவரே நமஸ்காரம்.

449. யுகக்ருத்யப்ரபாஸகாய நம:

யுகத்தின் வருவன போவன இருப்பனவற்றை தீர்மானிப்பவரே நமஸ்காரம்.

450. காமாரயே நம:

ஆசையை அழிப்பவரே நமஸ்காரம்.

451. காமாச்சாரிணே நம:

நினைத்த மாத்திரத்தில் எங்கு வேண்டுமோ செல்பவரே நமஸ்காரம்.

452. நிஷ்காமாய நம:

ஆசையற்ற பரம்பொருளே நமஸ்காரம்.

453. காமிதார்த்ததாய நம:

பக்தர்களின் தேவைகளை ஆசைகளை நிறைவேற்றுபவரே நமஸ்காரம். (குறைவொன்றுமில்லை, குறையொன்று மில்லை கோவிந்தா)

454. வரேண்யாய நம:

வரங்களை தரவல்லவரே நமஸ்காரம்.

455. ஸம்ஸாந்தாய நம:

சாந்தியே நமஸ்காரம். (சாந்தி சாந்தி ஓம் சாந்தி:)

456. சார்ங்கிணே நம:

சார்ங்கம் எனும் ஆயுதம் தரித்த சாரங்கபாணியே நமஸ்காரம்.

457. வைகுண்ட மந்திராய் நம:

வைகுண்டவாசனே நமஸ்காரம்.

458. ஹயக்ரீவாய நம:

ஹயக்ரீவரே நமஸ்காரம். (வேதங்களை மீட்டு வர குதிரை முகக் கடவுளாக மாறியவர் திருமால்.)

459. கைடபக்னே நம:

கைடபனை அழித்தவரே நமஸ்காரம்.

460. க்ராஹக்னே நம:

துன்பப்படுத்துவோரை, ரணப்படுத்துவோரை அழிப்பவரே நமஸ்காரம்.

461. கஜரக்ஷகாய நம:

கஜேந்திரனை காத்தவரே நமஸ்காரம். (கஜேந்திர மோட்சமளித்தவரே ஆதிமூலம்)

462. சச்சித்தஸம்ஸய சேத்ரே நம:

நல்லோர் மனக்கலக்கம் தீர்ப்பவரே நமஸ்காரம்.

463. ஸதாம் சித்த ஸமுன்னதே நம:

சாதுக்களின் சித்தத்தை உன்னத மார்க்கத்திற்கு செலுத்துபவரே நமஸ்காரம்.

464. கபர்திேனே நம:

சிவசொரூபியே நமஸ்காரம்.

465. காமரூபாய நம:

நினைத்த ரூபமெடுப்பவரே நமஸ்காரம்.

466. கலாயை நம:

கலைகள் 64ன் சொரூபமான சக்தி சொரூபியே நமஸ்காரம்.

467. காஷ்டாயை நம:

சிவசக்தியே நமஸ்காரம். (சிவ-சக்தி அபின்னரூபமே பெருமாள்)

(இதை ஆதாரமாகக் கொண்டதே H.H சிவசங்கரா ஹரிஹர சக்திசொரூபம் என்ற தத்துவம்.)

468. ஸ்மிருத்யை நம:

ஸ்மிருதியே நமஸ்காரம். (சாஸ்திரத்தின் அடிப்படை ஸ்மிருதி)

469. த்ருத்யை நம:

தீர்மானம் -உறுதியென்ற சங்கல்பமும் அவரே நமஸ்காரம்.

470. அநாதயே நம:

சுயம்புவே நமஸ்காரம்.

471. அப்ரதானௌஜஸே நம:

உவமையில்லாத ஓஜஸ் சக்தியே நமஸ்காரம்.

472. ப்ரதாநாய நம:

எல்லாவற்றுக்கும் பிரதானபுருஷரே நமஸ்காரம்.

473. ஸந்நிரூபகாய நம:

அனைத்துக்கும் ஆதார ரூபமானவரே நமஸ்காரம்.

474. நிர்லேபாய நம:

வெளிவேஷத்தை வெறுப்பவரே நமஸ்காரம்.

478. நிஸ்ப்ருஹாய நம:

விருப்பு வெறுப்பு தேவைகளுக்கு அப்பாற்பட்டவரே நமஸ்காரம்.

479. அஸங்காய நம:

எதடனும் சேராத தனிப் பெருங்கருணையே நமஸ்காரம்.

480. நிர் பயாய நம:

எதற்கும் அஞ்சாதவரே நமஸ்காரம்.

(நாராயணா எனும் நாமம் பாராயணம் செய்வோர்க்கு ஜெயமுண்டு பயமில்லை மனமே)

481. நீதி பாரகாய நம:

நீதிதேவனே நமஸ்காரம்.

482. நிஷ்க்ரியாய நம:

நிஷ்காம்யமான கர்மா நெருங்க முடியாத புனிதமே நமஸ்காரம்.

483. நிஷ்ப்ரியாய நம:

இச்சையற்றவரே நமஸ்காரம்.

484. சாந்தாய நம:

சாந்த சொரூபமே நமஸ்காரம். (வேங்கடத்தான் நாம உச்சாடனம் ஸர்வதுக்க சாந்தி பரிஹாரம்).

485. நிஷ்ப்ர பஞ்சாய நம:

ப்ரபஞ்சமே அவர் சிருஷ்டித்தது. ஆனால் அவர் அதற்கு அப்பாற்பட்டவர். பேரொளியே நமஸ்காரம்.

486. நிதயே நம:

மூலநிதியே நமஸ்காரம்.

487. நயாய நம:

நல்வழிகாட்டும் நாயகனே நமஸ்காரம்.

488. கர்மனே நம:

கர்மாதிகாரம் பெற்றவரே நமஸ்காரம்.

489. அகர்மிணே நம:

அந்த கர்மத்தை விலகி விடுபட்டு ஞானமார்க்கத்தை அடைய வழிவகுத்தவரே நமஸ்காரம்.

490. விகர்மிணே நம:

கர்ம மோஷதாயகனே நமஸ்காரம்.

491. கர்மைப்ஸவே நம:

கர்மநியதி கர்த்தாவே நமஸ்காரம்.

492. கர்ம பாவநாய நம:

கர்மவழிகாட்டுபவரும் அவரே. நமஸ்காரம்.

493. கர்மபுஜே நம:

கர்மபலனை அனுபவிப்பவரே நமஸ்காரம்.

494. கர்ம பலதாய நம:

கர்மபலனைத் தருபவரே நமஸ்காரம்.

495. கர்மேசாய நம:

கர்மத்தின் ஈஸ்வரனே நமஸ்காரம்.

496. கர்ம நிக்ரஹாய நம:

கர்மத்தை ஒழிப்பவரே நமஸ்காரம்.

497. நரர்ய நம:

நரனாக தோன்றியவரே நமஸ்காரம்.

498. நாராயணாய நம:

நாராயணனே நமஸ்காரம்.

499. தத்தாய நம:

தத்தாத்ரேயரே நமஸ்காரம்.

(பிரம்மா, விஷ்ணு, சிவன் முக்கூட்டே தத்தாத்ரேயர்)

500. கபிலாய நம:

கபிலமகரிஷியே நமஸ்காரம்.

501. நேத்ரே நம:

(நல்வழிகாட்டுவதோடு மட்டுமல்ல) பக்தனை தலைமை தாங்கி நல்வழியில் கூட்டிச் செல்லும் துணைவரே நமஸ்காரம்.

502. லயாய நம:

பக்தனை பாதை மாறாமல் பார்த்துக் கொள்பவரே நமஸ்காரம். (இசையில் ஸ்ருதியை விலகிவிடாமல்

காப்பது லயம் என்ற தாளம். ஸ்ருதி மாதா லயம் பிதா என்பர். உபாசனையிலும் லயம் பிரதானமானது).

503. கதயே நம:

மார்கமும் அவர் ரூபமே. மார்க்கமான மார்க்கபந்துவே நமஸ்காரம்.

504. காமதாய நம:

வேண்டுவதைத் தரும் வேங்கடேசனே நமஸ்காரம்.

505. கச்சயே நம:

ஆசாரசொரூபியே நமஸ்காரம்.

506. ஜப்த்ரே நம:

ஜபங்களின் ரூபமே நமஸ்காரம்.

507. சுப்த்ரே நம:

தபங்களின் வலிமையே நமஸ்காரம்.

508. க்ஷமாவதே நம:

மன்னிக்கும் மனமுடையவரே நமஸ்காரம்.

509. கம்த்ரே நம:

நல்வழிகாட்டுபவரே நமஸ்காரம்.

510. சிஷ்டாய நம:

அனைத்துமறிந்த சர்வஞானியே நமஸ்காரம்.

511. த்ரஷ்ட்ரே நம:

அனைத்துமாகி அனைத்துமே ஒன்றாகி பார்க்குமிடம் எல்லாம் அந்த பரம்பொருளே, பரம்பொருள் ஒன்றே எல்லாம். எல்லாம் சமம். எல்லோரும் சமம். பார்க்கப்படுபவை நானே என்ற விழிநாதனே நமஸ்காரம்.

512. ரிபுத்வேஷ்ட்ரே நம:

பக்தனின் பகைவரெல்லாம் பரமனாகிய தனது பகைவரெனக் கருதுபவரே நமஸ்காரம்.

513. ரோஷ்ட்ரே நம:

பக்தனை எதிர்ப்போரை கண்டு கோபமடையும் குணாளனே நமஸ்காரம்.

514. வேஷ்ட்ரே நம:

தீயதை சுற்றி வளைப்பவரே நமஸ்காரம்.

515. மஹா நடாய நம:

வேஷதாரி, ஜகத்நாடக சூத்ரதாரி, லீலாவினோதனே நமஸ்காரம்.

516. ரோத்ரே நம:

ரோதனையும் அவரே. பக்தர் வழி சோதனையும் அவரே.

517. போத்ரே நம:

போதனையும் அவரே.

518. மஹாயோத்ரே நம:

பக்தர்களின் கஷ்டங்களை எதிர்த்து அவன் சார்பில் போராடும் பெருமானே நமஸ்காரம்.

519. ஸ்ரத்தாவதே நம:

முக்தி சிரத்தையோடு ஜீவனிலிருக்கும் முகுந்தனே நமஸ்காரம்.

520. ஸம்பத்ப்யோ நம:

சகல ஸம்பத்துகளையும் வழங்கும் பொக்கிஷமே நமஸ்காரம்.

521. சுபாய நம:

சுப சுக சொரூபமே நமஸ்காரம்.

522. மந்த்ரிணே நம:

மந்திர சொரூபமே நமஸ்காரம்.

(பெரியவர் ரங்கராஜன் மந்திரசொரூபமானவர்)

523. மந்த்ராய நம:

மந்திராலயமாகத் திகழும் பகவானின் ரூபமே மந்திர அட்க்ஷர ரூபம்.

உதாரணம் கூறி விளக்க கடமைப்பட்டுள்ளேன். ''ராம'' இது எளிய, இனிய எல்லாரும் உபதேசிக்கும் நாமம். நாராயணத்திலிருந்து ''ரா'' காரமும் நமச்சிவாயத்திலிருந்து ''ம''காரமும் சேர்ந்து இணைந்து ''ராம'' அன்ன அமிர்தமும் அக்னியும் விஷ்ணுவும் சிவனும் ஹரிஹர சங்கமம் ''ராம''. அது நாமம். அதுவே மந்த்ரம். மந்திரமே திருநாமமாகக் கொண்ட மகாபுருஷரே நமஸ்காரம். இதே போல் சமஸ்கிருதத்தில் ''வேம்'' என்றால் பாபம். ''கட'' என்றால் நாசம் செய்தல். ''அசலம்'' மலை. பாபத்தை அழிக்கும் மலை. வேங்கடாசலம்.

524. மந்த்ர கம்யாய நம:

மந்திரங்களுக்கு கட்டுப்பட்டு மந்திர உபாசனை வழி நடப்பவரே நமஸ்காரம். (பெரியவா ரங்கராஜன் இருபத்தி நான்கு மணி நேரமும், மந்திரோபாசனை செய்பவர்)

525. மந்த்ர க்ருதே நம:

மந்திரத்தை உருவாக்கி, வகுத்து, சின்னப்படுத்தி பின்னப்படுத்தி அதற்கு உருவும் உயிரும் பிரயோக பலமும் தரும் வேத நாராயணனே நமஸ்காரம்.

526. பரமந்த்ர ஹ்ருதே நம:

எதிரிடை மந்திரங்களை (வாமாசராம்) அழிப்பவரே நமஸ்காரம். ரமண என்பதை எதிரிடைப்படுத்தி மரண என செலுத்தும் வாமாச்சார மந்திர பிரயோகங்களே ஏவல், பில்லி, சூன்யம் போன்ற தீமை பலன் மந்திர உச்சாடனங்கள். ''சக்கரத்தாழ்வார்'' சுதர்ஸனர் இதன் எதிரியாவார்.

527. மந்த்ர புஜே நம:

மந்திர உச்சாடனங்களால் மகிழும் புஜங்களை மந்திரமாகக் கொண்டவரே நமஸ்காரம்.

528. மந்த்ர பலதாய நம:

மந்திர பலனை மகிழ்வுடன் தருபவரே நமஸ்காரம்.

529. மந்த்ரேசாய நம:

மந்திரங்கள் போய் சேரும் ஈஸ்வரனே நமஸ்காரம். ஸ்ரீவேங்கடேசாய நம:

530. மந்த்ர விக்ரஹாய நம:

த்ருஷ்ட பீஜாக்ஷரங்களால் நிர்ணயித்து ஸ்தாபிக்கப்பட்ட விக்ரக ரூபமே நமஸ்காரம்.

531. மந்த்ராங்காய நம:

மந்திரங்களின் அங்கங்களாக திகழ்பவரே நமஸ்காரம்.

532. மிந்த்ர வின்யாஸாய நம:

ரிஷி, சந்தஸ், தேவதை, ந்யாஸம் இவைகளை மந்திரங்களுக்கு ஏற்படுத்தி இவைகளாக இருப்பவரே நமஸ்காரம்.

533. மஹாமந்த்ராய நம:

மஹாமந்திர ரூபத்தில் அமர்ந்திருக்கும் மந்திரராஜாவே நமஸ்காரம். (காஞ்சீபுரம் வாலாஜா வழியில் பழைய சீவரத்தில் ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹராக லக்ஷ்மியை மடியில் அமர்த்தி 'ஸ்ரீ' மடியிலிருக்க நரஸிம்ஹம் காருண்ய யோக நிலையிலிருப்பதை கண்டு தரிசிக்கவும்.)

534. மஹாக்ரமாய நம:

வகுக்கப்பட்ட மந்திரோபாசன வழியில் முறையாக இருப்பவர், இலக்கணமானவர் அவர். அவருக்கு நமஸ்காரம்.

535. ஸ்தித தியே நம:

பரமஞானியே பரமஞான சொரூபமே நமஸ்காரம். (H.H. யோகி ராம் சுரத்குமார், H.H. சிவசங்கரா போன்றோர் இந்த வாக்கியத்தன்மை கொண்ட ஞானமூர்த்தி சொரூபங்களே).

536. ஸ்தித விஞ்ஞானாய நம:

பரம விஞ்ஞானியும் அவரே. பரமவிஞ்ஞான சொரூபமே நமஸ்காரம்.

537. ஸ்தித ப்ரக்ஞாய நம:

சதா சர்வ காலமும் விழிப்பு நிலையிலிருக்கும் பிரம்ம சொரூபமே நமஸ்காரம்.

538. ஸ்திதாஸனாய நம:

ஸ்திர நிலை தத்துவமே நமஸ்காரம். சாஸ்வதமே சாஷ்டாங்க நமஸ்காரம்.

539. ஸ்தித யோகாய நம:

யோகியே நமஸ்காரம். (தட்க்ஷிணாமூர்த்தி, வேங்கடேசம் அவர்களின் சங்கமக் கலவையான

ஹரிஹரசுதன் ஐயப்பன், யோக நரஸிம்ஹம், ஹயக்ரீவர் இவர்களெல்லாம் சர்வகால ஸ்தித யோக புருஷர்கள்).

540. ஸ்திதாஹாராய நம:

"அன்னமெனப்படும்" "அமிர்தம்" எனப்படும் ஆகாரமானவரே நமஸ்காரம்.

541. ஸ்தித மார்க்காய நம:

He is our Supreme Guide. வழிகாட்டும் கிருபாகடாட்சனே நமஸ்காரம். (ஹரஹரிசங்கரா.... சிவசங்கரா....)

542. ஸ்திதாகமாய நம:

சாஸ்வதமான ஆகமநெறியாக இருப்பவரே நமஸ்காரம். (ஆலய யந்திர பிரதிஷ்டைதான் ஜனதன ஆகர்ஷணத்தின் காரணமே)

543. நி:ஸ்ரேயஸாய நம:

நிரந்தரமான ஸ்ரேயஸாக விளங்குபவரே நமஸ்காரம். ஸ்ரீநிவாசாய மங்களம். ஸ்ரீநிவாசாய மங்களம்

544. நிரீஹாய நம:

ஹரி ஹர சக்தி ரூபமான அவரே அனைத்துக்கும் ஆதார மூலாதார இயக்குனர். அவருக்கு நமஸ்காரம். He is the force behind anything and everything.

545. அக்னயே நம:

அக்னி சொரூபமே நமஸ்காரம். (இது ஒரு மிகப் பெரிய அரியதாத்பர்யம். அக்னி எனப்படும் தீ, நெருப்பு முதலிலிருந்து முடிவு வரை இருக்கக் கூடியது. செல்லக்கூடியது. உடல் முதல் உலகம் வரை அனைத்துக்கும் அக்னியே கர்த்தா.

பஞ்ச பூதங்களில் அக்னி தான் பிரதானம். ஒவ்வொரு வீட்டிலும் அக்னி எரிவது அவசியமெனப்படும். அக்னிபகவான் ஒருவர் தான் எல்லா லோகங்களுக்கும் செல்லும் தகுதி உடையவர். நம் பூலோகத்தின் நிலத்தன்மை, மண்வளநிலை, ஆகர்ஷண புவிஈர்ப்பு பிற லோகங்களில் இல்லை. நீர்தன்மை இல்லை. காற்று வித்யாசப்படும். காற்று மண்டலமில்லாத வெற்றிடமும் உண்டு. ஆகாயம் இல்லை. ஆனால் அக்னி உண்டு. அக்னி சகல உலகமும் கடக்கும். அதனால் தான் வேள்வி எனப்படும் யாகம் அக்னியை பிரதானப்படுத்தி ஹவிர்பாகத்தை தெய்வங்கட்கும், சுபகாரியங்களில் தேவதைகளுக்கும், பித்ரு காரியங்களில் பித்ருக்களுக்கும் செலுத்த உதவுகிறது. அக்னி வழிவருவதே இறைவனுக்கு சிறந்த, சீக்ரமாக வரும் வழி.

சாமிக்கு விளக்கேற்றுதல், கற்பூரம் கொளுத்துதல் எல்லாமே இறைவன் வர நீங்கள் காட்டும் வழி. அக்னியால் வந்த பந்தம் அக்னியால் போகும். அக்னியே உடலை உள்ளத்தை தூய்மைப்படுத்தும்.

அக்னி பற்றி தனியாக புத்தகமே எழுதலாம். அத்தனை விசேஷம்.

546. நிரவத்யாய நம:

அழிக்க முடியாதவரே நமஸ்காரம். இறைவன் பக்தர்களைக் காட்டிலும் தூஷித்து, அழிக்க, அகற்ற நினைப்போரால் அதிக பிரபலமடைந்து அழியாப் பொருளாக விளங்குபவன். ராவணனால் ராமனும், சகுனியால் கிருஷ்ணனும், நாத்திகத்தால் ஆத்திகமும் வளர்ந்து பேசப்படும் என்பது தர்ம பரிபாலன வாக்கியம். அதன் சான்றே மலையப்பர்கள் ஸ்ரீவேங்கடநாதனும், சபரிநாதனுமாவார்கள்.

இது கலியுகத்தில் கண்கண்ட உண்மை.

547. நிரஞ்ஜநாய நம:

தூயவர். அவித்யையின் சம்பந்தமில்லாத புனிதனே நமஸ்காரம்.

548. நிர்வைராய நம:

விரோதிகளில்லாத தீனபந்துவே தீனதயாளனே நமஸ்காரம். கெட்டவனை நல்லவனாக்குபவர். திருடனை திருமங்கையாழ்வாராக மாற்றிய திருவே திருஉருவே நமஸ்காரம்.

549. நிர்அஹங்காராய நம:

அகம்பாவமில்லாத அடியார்க்கடியவரே நமஸ்காரம்.

550. நிர்தம்பாய நம:

ஆடம்பரமற்றவர். அவர் அணிவதால் அலங்காரம் அலங்காரமாகிறது. சர்வவியாபிக்கு நமஸ்காரம்.

551. நிரஸூயகாய நம:

அஸூயை பொறாமையற்றவரே நமஸ்காரம்.

552. அநந்தாய நம:

எங்கும் எதிலும் வியாபித்த அனந்த நாராயணனே நமஸ்காரம்.

553. அநந்த பாஹூரவே நம:

எண்ணற்ற கைகளைக் கொண்டு உலகை அணைக்கும் விஸ்வரூபியே நமஸ்காரம்.

554. அநந்தாடங்ரயே நம:

பல திருவடிகளைக் கொண்டவரே நமஸ்காரம்.

கோவிந்தா.. பஜ கோவிந்தா உன் பல திருவடிகளிலொன்றை என் தலையில் வைக்க வாருங்களேன். ஏற்கனவே எழுதப்பட்ட தலையெழுத்து உம் பாதம்பட்டு அழியும். உம் திருவடிச் சுவடு தலையில் பதியும். அழுத்திப் பதித்தால் என்ன? அனுபம் இருக்கின்றதே உமக்கு. பலியின் தலையில் கால் வைத்தவர் தானே. பரதன் பாதுகையாக உமது திருவடியை தலைமேல் சுமந்த பாக்யவான். ஓம் நமோ நாராயணா.

555. அனந்தக்ருதே நம:

எதையும் மிகையாக்குபவர். ஒரு பூ, ஒரு துளசி இதழ், ஒரு நாமா பலனோ கோடானுகோடி. மஹாபிரபோ நமஸ்காரம்.

556. அநந்தவக்த்ராய நம:

அனேக வதனங்களைக் கொண்ட சுந்தர வதனமே நமஸ்காரம்.

557. அனந்தாங்காய நம:

அனேக அங்கங்களை உடையவரே நமஸ்காரம்.

558. அனந்த ரூபாய நம:

எண்ணிலடங்கா ரூபங்களை உடையவரே நமஸ்காரம்.

559. அனந்தப்ருதே நம:

எண்ணிலடங்கா ஆயுத அணிகலன் கொண்டவரே நமஸ்காரம்.

560. ஊர்த்வரேதஸே நம:

ஊர்த்வ ரேதம்- விரூபாக்ஷம். குண்டலினி முறையில் வீர்ய சக்தியை மேற்புறமாக சிரஸுக்கு செலுத்துதல்.

மகாயோக நிலை. அப்படிச் செய்த மகாயோகியே நமஸ்காரம்.

561. ஊர்த்வ லிங்காய நம:

மேல்நோக்கிய லிங்கமுடையவரே நமஸ்காரம்.

562. ஊர்த்வாய நம:

மேல்நோக்கியவரே நமஸ்காரம்.

563. ஊர்த்வோர்த்துவ சகிகாய நம:

அவரது குண்டலினி கர்ணிகாசொரூபமாக மேல்நோக்கிச் செல்வது. அப்படிப்பட்ட தபஸ்விக்கு நமஸ்காரம்.

564. ஊர்த்வமூலாய நம:

மூலாதாரமும் மூண்டெழுகனலும் மேல்நோக்கியது. அவருக்கு நமஸ்காரம்.

565. ஊர்த்வ ரக்ஷிணே நம:

மேலேயுள்ள பட்க்ஷி மற்றும் அனைத்தையும் காக்கும் பட்க்ஷிராஜனே நமஸ்காரம்.

566. ஊர்த்வஜ்வாலாய நம:

அவரது தேஜஸ் மேல்நோக்கியது. ஜோதி மயம். ஒளிவெள்ள நிலை. அவருக்கு நமஸ்காரம்.

567. நிராகுலாய நம:

வியாகூல விசனங்களுக்கு அப்பாற்பட்டவரே நமஸ்காரம். குலாச்சாரத்திற்கு அப்பாற்பட்டவர் எனவும் பொருள் கூறுவர்.

568. பீஜாய நம:

வித்தானவர் வித்திட்டவர். விதையானவர். அவருக்கு நமஸ்காரம்.

569. பீஜப்ரதாய நம:

வித்தின் நிலமான அவரே அந்தந்த பீஜகோசத்தை அடையும் சக்தியாய் இருப்பவர். அவருக்கு நமஸ்காரம்.

570. நித்யாய நம:

நித்யசொரூபமே நமஸ்காரம்.

571. நிதானாய நம:

நிதான சந்நிதானமே நமஸ்காரம்.

572. நிஷ்க்ருதயே நம:

கிரியைகளில்லாதவரே நமஸ்காரம்.

573. க்ருதினே நம:

செய்து முடிக்கப்பட்ட பூரணமே பரிபூரண நிலையே நமஸ்காரம்.

574. மஹதே நம:

விளக்குவதற்கரியதான மகத்தான மகாசக்தியே நமஸ்காரம்.

575. அணீயஸே நம:

அணுவுக்கும் அணுவானவரே நுண்ணிய அணுவே நமஸ்காரம். (அனிமா சக்தி)

576. கரிம்னே நம:

கனமான கனத்தை தரும் சக்தியே நமஸ்காரம் (கரிமா சக்தி) அதாவது பளுவை பளுவாக்கும் சக்தி. அவர் பளுவாக்கிய தான் அது பளுவானதென்ற நிலை சக்தி நிலை.)

577. ஸுஷும்ணே நம:

சூட்சும நாடியாக இருப்பவரே நமஸ்காரம். (குண்டலினியோகிகள் இந்த ஸுஷும்னா நாடி மூலந்தான் ஸ்வாசத்தை மேலேற்றுவர்).

578. சித்ரமாலிகாய நம:

நட்க்ஷத்ர மாலையணிந்தவரே நமஸ்காரம்.

579. நபஸே நம:

ஆகாயசொரூபியான நீலமேகனே நமஸ்காரம்.

580. நபஸ்வதே நம:

வானில் ஜொலிப்பவரே நமஸ்காரம்.

581. ஜ்யோதிஷே நம:

வானமண்டல கிரக நட்சத்திர சலனமே, நகர்வே நமஸ்காரம்.

582. அதப்யோ நம:

பூமிக்கு கீழேயிருப்பதாக இருப்பவரே நமஸ்காரம்.

583. மஹ்யை நம:

பூமியானவரே நமஸ்காரம். பூமிநாதனே நமஸ்காரம்.

584. திக்ப்யோ நம:

பத்து திசைகளாகயிருப்பவரே நமஸ்காரம்.

585. ஆபுவே நம:

புவி இயலானவரே நமஸ்காரம். பூகோள ரூபமானவரே நமஸ்காரம்.

586. விபுவே நம:

ஆகாய மண்டலமானவரே நமஸ்காரம்.

587. ப்ரபுவே நம:

பூமிநாத பூபாலனே நமஸ்காரம்.

588. ஸாம்புவே நம:

மங்களத்தை தருபவரே நமஸ்காரம். (ஸாம்பு -சிவன்)

589. மஹீயஸே நம:

எல்லாவற்றுக்கும் மேம்பட்டவரே நமஸ்காரம்.

590. பூர் புவாக்ருதயே நம:

பூமி ஆகாயம் இரண்டிலும் வியாபித்தவரே நமஸ்காரம்.

591. மஹாநந்தாய நம:

மகா ஆனந்தமெனப்படும் பேரின்பத் திளைப்பே நமஸ்காரம்.

592. மஹா ஸூராய நம:

மகா சூரரே நமஸ்காரம்.

593. மஹா ராசயே நம:

சிறந்த ராசியாதிபத்யமானவரே நமஸ்காரம்.

594. மஹோத்ஸவாய நம:

என்றும் உற்சவ ரூபமாயிருப்பவரே நமஸ்காரம்.

595. மஹா க்ரோதாய நம:

பக்திக்கு தடையாயிருப்பவர்கள் மீது பழி தீர்க்கும் கோபம் கொள்பவரே நமஸ்காரம்.

596. மஹாஜ்வாலாய நம:

மாபெரும் ஜ்வாலாக்னியே நமஸ்காரம்.

597. மஹா ஸாந்தாய நம:

சாந்த சொரூபியே நமஸ்காரம்.

598. மஹாகுணாய நம:

சகல கல்யாண குணங்களையும் கொண்டவரே நமஸ்காரம்.

599. ஸத்யவ்ரதாய நம:

டக்தர்களை பேணும் சத்ய சொரூபியே நமஸ்காரம். உண்மையிலிருந்து பிறழாத சத்யவிரதம் கொண்டவர். சத்யநாராயணன் தாள் போற்றி.

600. ஸத்ய பராய நம:

ஸத்யத்தை விட்டு அணுவளவும் நகராத ஸத்யத்தின் பக்கம் இருக்கும் ஸத்யமேவ ஜெயதே எனப்படுபவர்.

601. ஸதாகதயே நம:

ஸத்வழி செல்பவர்களை ஸத்ய நிலையில் தொடருபவரே நமஸ்காரம்.

602. ஸத்யேசாய நம:

சத்யசீலரே நமஸ்காரம்.

603. ஸத்ய சங்கல்பாய நம:

ஸத்யத்தை காக்க ஸத்யமாக இருக்க ஸத்ய (சங்கல்பம்) மெடுத்தவர். உண்மையே உயர்வு தரும் என பக்தனுக்கு உபதேசித்தவர். ஸ்ரீ ஸத்ய நாராயணரே நமஸ்காரம்.

604. ஸத்ய சங்கல்பரே நம:

அவரது செயல்களே அவரது ஸத்யத்தின் லக்ஷணமாக திகழ்கின்றது. ராம, கிருஷ்ண அவதார புருஷரே நமஸ்காரம்.

605. ஸத்ய சாரித்ர லக்ஷணாய நம:

ஸ்ரீஸத்ய நாராயணரே நமஸ்காரம்.

605. அந்தஸ்சராய நம:

பக்தனின் அந்தரங்க சுத்தியில் கலந்து அருளும் பெருமானே நமஸ்காரம்.

606. அந்தராத்மனே நம:

சகலவற்றின் அந்தராத்மாவாகவும் விளங்குபவரே நமஸ்காரம்.

(இருப்பினும்)

607. பரமாத்மனே நம:

பரமாத்மா அவர் ஒருவரே. பரம்பொருளே நமஸ்காரம்.

608. சிதாத்மகாய நம:

(பக்தனின்) சித்தத்திலிருப்பவரே நமஸ்காரம்.

609. ரோச்சனாய நம:

''ருசி''த்தபடி இருப்பவரே நமஸ்காரம்.

610. ரோச்சமானாய நம:

ருசியும் அவரே. ருசிப்பதும் அவரே. அவருக்கு நமஸ்காரம்.

611. ஸாக்ஷிணே நம:

சர்வசாட்சியானவரே நமஸ்காரம். He is the unseen withness of every scene.

612. சௌர்யே நம:

சௌரிராஜனே நமஸ்காரம். சௌரி என்றால் சூர்யன்.

613. ஜனார்த்தனாய நம:

ஜனார்த்தனன் என அழைக்கப்படும் மக்கள் தலைவரே நமஸ்காரம்.

614. முகுந்தாய நம:

முகுந்தனே நமஸ்காரம்.

615. நந்தநிஷ்பந்தாய நம:

நந்தகோபர்களை மெய்மறந்து மகிழ்வில் திளைக்க செய்தவரே நமஸ்காரம்.

616. ஸ்வர்ண பிந்தவே நம:

ஸ்வர்ணமயமான பிந்து சொரூபியே நமஸ்காரம். (சொர்ணமயமே உமது ரத்தம் என்றும் பொருள் கூறுவர்).

617. புரந்தராய நம:

முப்புரமும் அவர் சொந்தம். அதனால் புரந்தரன் என பெயர். புரந்தரனே நமஸ்காரம்.

618. அரிந்தமாய நம:

சத்ருக்களை கிள்ளி எறிந்தவரே நமஸ்காரம்.

619. ஸமந்தாய நம:

பாரபட்க்ஷமில்லாதவரே நமஸ்காரம்.

620. குந்த மந்தார வைபவாய நம:

குந்த, மந்தார மலர்களால் அலங்கரிக்கப்படுபவரே நமஸ்காரம்.

621. ஸ்யந்தனாரூட சண்டாங்காய நம:

ரதம் ஏறியவுடன் அதீதமான முக தேஜஸுடன் தோன்றும் சாரதியே நமஸ்காரம்.

622. கஜஸ்கந்தோட நந்தனாய நம:

யானை மீது பவனி வரும் கஜேந்திர மோட்க்ஷதாரியே நமஸ்காரம்.

623. அனஸூயானந்தனாய நம:

அனுசூயை மகனாக வந்து ஆனந்தமளித்தவரே நமஸ்காரம். இன்னொரு பொருள் He is without envy. so completely happy எனலாம்.

624. அத்ரிகோத்ரானந்தாய நம:

அத்ரி மகரிஷி வம்சாவளியாக அத்ரி கோத்திரத்தில் உதித்தவரே நமஸ்காரம்.

625. சுகுந்தவதே நம:

அழகிய குந்தமலரணிந்தவரே நமஸ்காரம்.

626. சங்க்கவதே நம:

சங்கினை கையில் வைத்திருப்பவரே நமஸ்காரம்.

627. பங்கஜகராய நம:

தாமரையொத்த கைகளைக் கொண்ட தாமரைமணாளா நமஸ்காரம்.

628. கும்குமாங்காய நம:

குங்குமம் போன்ற சிவந்த மேனியுடையவரே நமஸ்காரம். (சுப்ரம்மண்ய ஸ்வரூபி)

629. ஜயாங்குசாய நம:

வெற்றியை அங்குசமாகக் கொண்டவரே நமஸ்காரம்.

630. அம்போஜ மகரந்தாட்யாய நம:

தாமரை மலர்களின் மகரந்தங்களால் தூவி அலங்கரிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

631. நிஷ்பங்காய நம:

பங்கமோ களங்கமோ, இல்லாத அதற்கப்பாற்பட்டவரே நமஸ்காரம்.

632. அகுருபங்கிலாய நம:

வாசனை பொருந்திய வாசனாதிரவியமே நமஸ்காரம்.

633. இந்த்ராய நம:

இந்திரனே நமஸ்காரம்.

634. சந்த்ரரதாய நம:

சந்த்ர ரதம் போன்றவர். அவர் கண்ணொளியே சந்திரன். ஆதலால் அவரே சந்திர ரதம். அவருக்கு நமஸ்காரம்.

635. சந்த்ராய நம:

சந்திரபகவானே நமஸ்காரம்.

636. நிஸ்ச்சந்த்ராய நம:

கண்கள் சந்திரனாவதால் என்றும் ஒளியுடனேயே இருக்கிறார். அவருக்கு நமஸ்காரம்.

637. ருத்ர வாஸகாய நம:

ருத்ரனும் இவரது மூர்த்தியில் ஐக்யம். ஆதிநாராயணனே நமஸ்காரம்.

638. உபேந்த்ராய நம:

விஷ்ணு உபஇந்திர ரூபம். இந்திரனின் சகோதரர் ஆகவே உபேந்திரனே நமஸ்காரம்.

639. ஸாந்த்ர ராஜ்யாங்காய நம:

சாணூரனை வென்று ராஜ்யத்தை பிடித்தவர். இன்னொரு பொருள் - பரமாத்மா சொரூபமே அவர் மூர்த்தி. அவருக்கு நமஸ்காரம்

640. வாகிந்த்ராய நம:

வாக்கு மேன்மையுடையவரே நமஸ்காரம். அவரே ஹயக்ரீவர்.(வாகீசர்)

641. சந்த்ர லேபனாய நம:

சந்திர சோபையை முகப்பூச்சாக உடையவர். சோபனாச்சந்திரனே நமஸ்காரம்.

642. ப்ரதீச்சே நம:

மேற்கு திக்கானவரே நமஸ்காரம்.

643. பராச்சே நம:

தீயைதை, தொல்லைகளை அகற்றுபவர். (தைவே பராச்சீ) தொல்லை தீர்க்கும் பெருமாளே நமஸ்காரம்.

644. பரஸ்மை தாம்னே நம:

அடையமுடியாத அப்பாற்பட்டவரே நமஸ்காரம். He is unattainable

645. பரமார்த்தாய நம:

உன்னத விளக்கத்தின் பொருளானவர். உத்கிருஷ்டமான விளக்கமே நமஸ்காரம்.

646. பரவராய நம:

எண்ணற்ற வரங்களை தரும் வரகுண பிரபுவே நமஸ்காரம்.

647. அபார வாச்சே நம:

அபாரமான வாக்குவன்மை பெற்றவரே நமஸ்காரம். (வாகீசர் ஹயக்ரீவரும் அவரேதான்)

648. பாரகாமினே நம:

ஞானத்தின் கரை கண்ட ஞானக்கடலே நமஸ்காரம்.

649. பாராவாராய நம:

ஞானக்கடலே நமஸ்காரம்.

650. பராத்பராய நம:

ஆதிபகவானே நமஸ்காரம். (பராத்பரா பரமேஸ்வரா என்ற பாடல் நினைவிற்கு வருகிறதா)

651. சஹஸ்வதே நம:

சகல அணி பவமுமானவரே நமஸ்காரம்.

652. அர்த்த தாத்ரே நம:

தனம் தரும் தனக்கோடியே நமஸ்காரம்.

653. ஸஹநாய நம:

நம்முனிடருப்பவரே நமஸ்காரம்.

654. ஸாஹஸினே நம:

திருவிளையாடல்புரியும் திருமலையப்பனே நமஸ்காரம்.

655. ஜயினே நம:

ஜெயத்தோடு கூடியவரே நமஸ்காரம். (ஜெய ஜெய என்ற சொல் அவர் நாமாவளிகளில் அதிகம் இடம் பெறும்)

656. தேஜஸ்வினே நம:

தேஜஸ்வியே நமஸ்காரம்.

657. வாயுவிஸிகினே நம:

அவருக்கு வாயு ஒரு அஸ்த்ரம். அவரே பிரணாயாமம். அவருக்கு நமஸ்காரம்.

658. தபஸ்வினே நம:

மகாதபஸ்வியே நமஸ்காரம். (பூவராக சித்தி பெற்றவர் பெருமாள்)

659. தாபஸோத்தமாய நம:

தவச்சிரேஷ்டமே நமஸ்காரம்.

660. ஐஸ்வர்யாய நம:

அஷ்ட ஐஸ்வர்யத்துக்கும் சொந்தக்காரரே நமஸ்காரம்.

661. பூதித்ருதே நம:

பூதி எனப்படும் ஸ்ரீமகாலக்ஷ்மியை மார்பில் தரித்த லக்ஷ்மி நாராயணா நமஸ்காரம்.

662. பூதயே நம:

எல்லாம் நிறைந்தவரே நமஸ்காரம்.

663. ஐஸ்வர்யாங்க கலாடகாய நம:

அவரது அங்கங்கெல்லாமே ஐஸ்வர்யத்தின் தோகைகள். வேங்கடரமண கோவிந்தா நமஸ்காரம்.

664. அம்போதி சாயினே நம:

சமுத்திரத்தை தன் படுக்குமிடமாக கொண்ட அனந்த சயனனே நமஸ்காரம்.

665. பகவதே நம:

'பகவான்' என்ற நாமத்தின் பொருளே, சொந்தக்காரரே நமஸ்காரம்.

666. தத்வஞாய நம:

ஞாய தத்வமுணர்ந்தவ்ரே நமஸ்காரம். (கண்ணன் கடைப்பிடித்தது தத்வஞாயம்)

667. ஞான பாரகாய நம:

ஞானசாகரத்தின் கரை கண்டவரே நமஸ்காரம்.

668. மஹாயோகினே நம:

மகாயோகியே நமஸ்காரம்.

669. மஹாதீராய நம:

இறைவன் ஒருவனே எதற்கும் கலங்காத தீரன். அவருக்கு நமஸ்காரம்.

670. மஹா போகினே நம:

போகத்தில் திளைத்த போகபோகியே நமஸ்காரம்.

671. மஹாப்ரபவே நம:

எல்லாவற்றுக்கும் மேலான பிரபுவே நமஸ்காரம்.

672. மஹாவீராய நம:

வீரலக்ஷணமே நமஸ்காரம்.

673. மஹாதுஷ்டமே நம:

ஸந்துஷ்டி எனும் மன நிறைவே அவர்தான். அவருக்கு நமஸ்காரம்.

674. மஹாபுஷ்டயே நம:

அனைத்தையும் உருவாக்கிய அகண்ட ஸ்மிருத்தியோடு கூடி மகாபுருஷரே நமஸ்காரம்.

675. மஹாகுணாய நம:

குணக்குன்றே நமஸ்காரம். கல்யாண கிருஷ்ண சரணம்.

676. மஹா தேவாய நம:

மஹா தேவனே நமஸ்காரம்.

677. மஹாபாஹவே நம:

நீண்ட கைகளை உடையவரே நமஸ்காரம்.

678. மஹாதர்மாய நம:

தர்மபிரபுவே தர்மவானே நமஸ்காரம்.

679. மஹேஸ்வராய நம:

மகேஸ்வரனே நமஸ்காரம்.

680. ஸமீபஸ்தாய நம:

நம் அருகிலிருப்பவரே நமஸ்காரம்.

681. தூரகாமினே நம:

(ஜடபுத்திக்கு) தூரத்தில் இருப்பவரே நமஸ்காரம்.

682. ஸ்வயோனயே நம:

சுயம்புவானவரே நமஸ்காரம்.

683. யோனயே நம:

இரண்யகர்பன் எனப்படும் ஜகத்தின் உற்பத்திக்கு காரணமான காரணபூதமும் அவரே. அவருக்கு நமஸ்காரம்.

684. அர்கலாய நம:

பாவத்தின் வாசற்கதவுக்கு தாழ்பாளாக இருப்பவரே நமஸ்காரம். அர்கலம் என்றால் தாழ்பாள். பாவமெனும் நரக வாசலை தாழ்பாளாக இருந்து தாளிட்டு சொர்க்க வாசலை திறந்து தன் தாள் பணிவோரை காக்கும் வைகுண்டவாசன் ஸ்ரீரங்கநாதர்.

ரங்க ரங்க என்றால் நம் அந்தரங்கம் அவன் கோயிலாகும்.

685. நகாய நம:

அவரே அசலம். அசலம் என்றால் மலை. அதனால் திருப்பதி திருமலையே 'பெருமாள்' என கொண்டாடப்படுகின்றது.

686. நகதாரய நம:

மலையும் அவரே. அதே போல் மலை சூழ்ந்தவரும் அவரே. மலை வாழ்ந்தவரும் அவரே. மலையை சுமப்பவரும் அவரே. ஸ்ரீவேங்கடாசலபதியே நமஸ்காரம்.

687. நாகாய நம:

நாகமானவரே நமஸ்காரம்.

688. நாகேஸாய நம:

நாகேஸ்வரனே நமஸ்காரம். (நாகம் என குறிப்பிடுவது ஆதிசேஷனைத்தான்)

689. நாகபாலகாய நம:

நாகங்களை ரட்சிப்பவரே நாகநாதனே நமஸ்காரம்.

690. ஹிரண்மயாய நம:

தங்கமயமானவரே நமஸ்காரம்.

691. ஸ்வர்ணரேதஸே நம:

சொர்ணமயமான ரேதஸ் (ரத்தம்) உடையவரே நமஸ்காரம்.

692. ஹிரண்யார்ச்சிஷே நம:

சொர்ணத்தால் அர்ச்சிக்கப்படும் தங்கப்பனே நமஸ்காரம்.

693. ஹிரண்யதாய நம:

பக்தனுக்கு தங்கத்தை வாரி வழங்குபவரே நமஸ்காரம்.

694. குணாகண்யாய நம:

கண்ணியந் தவறாத குணமுடைய கடவுளே நமஸ்காரம்.

695. சரண்யாய நம:

சரணாகதவத்ஸலனே நமஸ்காரம்.

696. புண்யகீர்த்தயே நம:

புண்யகீர்த்தியே நமஸ்காரம்.

697. புராணகாய நம:

புராணம் போற்றும் புனிதமே போற்றி நமஸ்காரம்.

698. ஜன்ய பியே நம:

ஜனன பயம் போக்குபவரே நமஸ்காரம்.

699. ஜன்ய ஸந்நதத்தாய நம:

எதையும் சிருஷ்டித்து தரும் ஆற்றலே நமஸ்காரம்.

700. பாஞ்சஜன்ய புஜாய நம:

பாஞ்சஜன்யமென்ற சங்கினை கையில் வைத்துள்ள கண்ணா நமஸ்காரம்.

701. வஸினே நம:

எதையும் வஸியம் செய்ய வல்லவரே நமஸ்காரம்.

702. தௌர்ஜன்ய பங்காய நம:

கெடுதலான செயல்களை செய்ய வைக்கும் கெட்ட எண்ணங்களை தோன்றவிடாமல் தடுப்பவரே நமஸ்காரம்.

703. ஸௌஜன்ய நிலயாய நம:

நல்ல எண்ணங்களின் வாசஸ்தலமே நமஸ்காரம்.

704. பர்ஜன்யாய நம:

மேகரூபமானவரே நமஸ்காரம். (மேகமே மழை தருவது)

705. அலயாய நம:

தனக்கென தனியோர் இடமில்லாத தெய்வமே நமஸ்காரம். (எங்கும் எதிலும் இருக்கும் அவருக்கெப்படி தனியிடமிருக்கும்)

706. ஜலந்தராந்தகாய நம:

ஜலந்தரனை சம்ஹாரம் செய்தவரே நமஸ்காரம்.

707. பஸ்மதைத்ய நாஸினே நம:

பஸ்மாஸுரனை அழித்தவரே நமஸ்காரம்.

708. மஹாமனஸே நம:

மன்னிக்கும் பெரிய மனமுடைய பெருமானே நமஸ்காரம்.

709. ஸ்ரேஷ்டாய நம:

மிக ஸ்ரேஷ்டமானவரே நமஸ்காரம்.

710. த்ரடிஷ்டாய நம:

கட்டுப்பாடானவரே நமஸ்காரம்.

711. வர்ஷிஷ்டாய நம:

வரங்களை வர்ஷிப்பவரே (மழை போல்) நமஸ்காரம்.

712. கரிஷ்டாய நம:

கனமான, அசைக்கவொண்ணாத முக்யமானவரே நமஸ்காரம்.

713. கருடத்வஜாய நம:

கருடவாகனனே நமஸ்காரம்.

714. ஜ்யேஷ்டாய நம:

மூத்தவரே, அனைத்துக்கும் முதல் மூத்தவரே நமஸ்காரம்.

715. யவிஷ்டாய நம:

இளமையானவரே நமஸ்காரம்.

716. வாஸிஷ்டாய நம:

ரக்தவண்ணமயமானவரே நமஸ்காரம்.

717. த்ராகீயஸே நம:

நீளமானவரே நமஸ்காரம். நெடுஞ்சாண்கிடையாக இருக்கும் நெடுமாலே திருமால்.

718. ப்ரணவாய நம:

ஓம் எனும் பிரணவ சொரூபனே நமஸ்காரம்.

719. பணாய நம:

''பணயம்'' வைத்து காப்பதில் ஆர்வமுள்ளவர். பந்தயங்கட்டும் பரந்தாமனே நமஸ்காரம். பண என்றால் லட்சியத்துக்காக வைக்கும் பொருள் என அர்த்தம். வேண்டுதலையென நேர்த்திக்கடனை வைப்பவர்கட்கு வேண்டியதை பூர்த்தி செய்து தருபவர். அதனால்தான் திருப்பதிக்கு மட்டும் பக்தர்கள் இதை செய்து தரவும், இன்னது செய்கிறேன், என்று வேண்டிப் பெறுகிறான். அதனாலேயே அவர் பணயம் வைத்து பலனளிப்பவர் ஆகிறார்.

720. ஸம்ப்ரதாய கராய நம:

சம்பிரதாயத்தை கடைப்பிடிக்கும் நாராயணா நமஸ்காரம்.

721. ஸ்வாமினே நம:

''ஸ்வாமி''யே சரணம்.

722. ஸ்வதேசாய நம:

எதுவுமே அந்நிய தேசமல்ல. சகலமும் சொந்த தேசமாகக் கொண்டவரே நமஸ்காரம்.

723. மாதவாய நம:

மாதவனே ரமணா நமஸ்காரம்.

724. மதவே நம:

இனிமை - இனிப்பே நமஸ்காரம்.

725. நிர்நிமேஷாய நம:

கண் இமைக்கா காருண்யனே நமஸ்காரம்.

726. விதயே நம:

விதியும் அவரே; விதைக்கப்பட்ட பிரும்மமும் அவரே. அவருக்கு நமஸ்காரம்.

727. வேதஸே நம:

பிரும்மனே அவர். அவருக்கு நமஸ்காரம்.

728. பலவதே நம:

பலசாலியே நமஸ்காரம்.

729. ஜீவனாய நம:

ஜீவன் எனும் சாச்வதமே நமஸ்காரம்.

730. பலினே நம:

அர்ப்பணமாகும் அத்தனையுமான ஹரியே நமஸ்காரம்.

731. ஸ்ருதாய நம:

(வேதங்களின்) ஸ்மிருதியின் ஸ்ருதியே நமஸ்காரம். கீர்த்தனமும் சங்கீர்த்தனமும் அவரே.

732. ஸ்ரோத்ரே நம:

கீர்த்தன சங்கீர்த்தனங்களை ஸ்மிருதியை ஸ்ருதியோடு இசைப்பதை கேட்டு ரசிக்கும் பரமரசிகரான பகவானே நமஸ்காரம்.

733. விகர்த்ரே நம:

செய்தவரே நமஸ்காரம். **He is the maker.**

734. ப்ராத்ரே நம:

(தமையனைப் போல்) தாங்கும் தலைவ நமஸ்காரம்.

735. நேத்ரே நம:

முன்னின்ற முக்ய தலைவரே நமஸ்காரம்.

736. ஸமாய நம:

எதற்கும் ஸமமாக தன்னை மாற்றிக் கொள்ளக் கூடியவர். ஆக்கிக் கொள்ளக் கூடியவர் (குழந்தைக்கு குழந்தை பக்தனுக்கு தாஸன் இப்படி) அப்படிப்பட்டவருக்கு நமஸ்காரம்.

737. அஸமாய நம:

(அதே சமயம்) அவருக்கு எதுவுமே ஈடுஇணையாக முடியாது. நன்றாக கவனித்தால் ரசிப்பீர்கள். அவர் எல்லாவற்றுக்கும் தன்னை ஸமமாக்கிக் கொள்வார். ஸமமாக்கிக் கொள்ள முடியும். ஆனால் அவருக்கு சமமாக எதுவும் இல்லை. வாமனனும் அவரே, விஸ்வரூபியும் அவரே. அது அவரால் முடியும். விஸ்வரூபிக்கு நமஸ்காரம்.

738. ஹோத்ரே நம:

யாகங்களின் பிரதானமே நமஸ்காரம்.

739. போத்ரே நம:

யாக யக்ஞத்தை உத்க்ருஷ்டம் செய்பவரே நமஸ்காரம். (யக்ஞம், அதன் தெய்வம், தீ, மந்திரம், மந்திர சக்தி, ஹவிர்பாகம், ஏற்பது, பலன் அனைத்தும் அவரே) அந்த யக்ஞ ராமனுக்கு நமஸ்காரம்.

740. மஹா வக்த்ரே நம:

யக்ஞத்தால் போற்றப்பட்ட 'வக்த' —வதனம் அவரே. அவருக்கு நமஸ்காரம்.

741. ரன்த்ரே நம:

'கோ' என்ற பசு ரூபமும் அவரே. போற்றப்படும் காமதேனுவே நமஸ்காரம்.

742. மந்த்ரே நம:

மந்திர சொரூபியே நமஸ்காரம்.

743. காலாந்தகாய நம:

யுக முடிவும் அவரே. அவருக்கு நமஸ்காரம். அறுபத்தி நான்கு கலைகளின் முடிவும் அவரே.

744. தாத்ரே நம:

ஸ்ரீவாரியாகிய வள்ளலே நமஸ்காரம்.

745. க்ராஹயித்ரே நம:

பறிப்பவரும், தன்பால் கிரஹிப்பவருமான வேங்கடநாதனுக்கு நமஸ்காரம்.

746. மாத்ரே நம:

மந்திரங்களின் நுணுக்கம், சப்தம், தொனி ஏற்ற இறக்கம், அர்த்தம் சொல்லப்படும் விதம். சொல்கின்ற மந்திரசொரூபமான வெங்கட்ராமனுக்கு நமஸ்காரம். (மந்திர மாத்திரை அளவும் அவரே).

747. நியன்த்ரே நம:

நியமிக்கும் தீர்மானமே நமஸ்காரம். (எது என்று எப்படி என்ற கால நேர நிர்ணய நியமனம் பெருமாளே)

748. அனந்த வைபவாய நம:

பலவித வைபவங்களால் கொண்டாடப்படும் உற்சவ மூர்த்தமே நமஸ்காரம்.

749. கோப்த்ரே நம:

ரட்க்ஷகரே நமஸ்காரம். அனாத ரட்க்ஷகா ஆபத்பாந்தவா ஸ்ரீவேங்கடரமணா சரணம்.

750. கோபாயித்ரே நம:

நியம, உபாசனை, யக்ஞங்களால் ரட்க்ஷிக்கப்படும் மூர்த்தியும் அவரே. அவருக்கு நமஸ்காரம்.

751. ஹன்த்ரே நம:

பாபங்களை அழிப்பவரே நமஸ்காரம்.

752. தர்ம ஜாகிரித்ரே நம:

எப்போதும் தர்மத்தைக் காக்க விழிப்பு நிலையிலிருக்கும் தர்மாத்மாவே நமஸ்காரம்.

753. தவாய நம:

பரம புருஷனே நமஸ்காரம்.

754. கர்த்ரே நம:

அனைத்தையும் செய்பவரே நமஸ்காரம். He is the doer of everything.

755. அக்ஷேத்ர கராய நம:

பக்தனை உருவம் வேறு உள்ளம் வேறாக பிரிந்து தன்னுடன் ஒன்று கலக்க செய்பவரே நமஸ்காரம்.

756. க்ஷேத்ரக்ரியாய நம:

க்ஷேத்ரமாகிய உடலின் செயலாக உள்ள தெய்வமே நமஸ்காரம்.

757. க்ஷேத்ரக்ஞாய நம:

உடலின் உறையும் உயிரின் வினைகளை அறிந்தவரே நமஸ்காரம்.

758. ஆத்மவதே நம:

ஆத்ம ஸ்வரூபியே நமஸ்காரம்.

759. க்ஷேத்ரிணே நம:

உடலின் உணர்வான உயிரே நமஸ்காரம்.

760. க்ஷேத்ர ஹராய நம:

அந்த க்ஷேத்ரமாகிய உடலை தன்வசமாக்குபவரே நமஸ்காரம்.

761. க்ஷேத்ரப்ரதாய நம:

உடலை புனிதமாக்குபவரே நமஸ்காரம்.

762. க்ஷேத்ர கராய நம:

தான் உறைவதால் மனித உடலை க்ஷேத்ரமாக்குபவரே நமஸ்காரம்.

763. மருதே நம:

வாயுரூபமே நமஸ்காரம்.

764. புக்திப்ரதாய நம:

பக்தனுக்கு ஜீவிதத்தில் மகிழ்வை தருபவரே நமஸ்காரம்.

765. முக்தி தாயினே நம:

பந்தவிமோசனமாகிய முக்தியை தரும் முகுந்தனே நமஸ்காரம்.

766. சக்திதாய நம:

மனோபலம் தருபவரே நமஸ்காரம்.

767. யுக்திதாயகாய நம:

சமயோஜித புத்தி, தந்திர யுக்தி இவைகளை போதிக்கும் ஸ்ரீகிருஷ்ணா நமஸ்காரம்.

768. ஷக்தியுஜே நம:

சக்தி சொரூபமே நமஸ்காரம்.

769. மௌக்திகஸ்ரக்விணே நம:

முத்துமாலை அணிந்த முராரியே நமஸ்காரம்.

770. முக்தாய நம:

பந்தபாச தளைகளிலிருந்து விடுபட்டவரே நமஸ்காரம்.

771. ஆம்னாய பாரகாய நம:

எல்லாவித கட்டுபாட்டுகளையும் கடந்தவரே கோவிந்தமே நமஸ்காரம்.

772. தனஞ்ஜயாய நம:

செல்வத்தால் வரும் மமதையை செல்வத்தின் மீது வரும் ஆசையை ஜெயித்து நிற்கும் தனசேகரனே நமஸ்காரம். மகாபாரதத்தில் வரும் தனஞ்ஜயனும் இவரே.

773. தனாத்யக்ஷாய நம:

தனம் தரும் அட்க்ஷய பாத்திரமே நமஸ்காரம்.

774. தனிகாய நம:

ஸ்ரீவேங்கடநாதன் பணக்காரர். ஸ்வாமி இதற்கு பிரமாணம். அவருக்கு எளியவன் நமஸ்காரம்.

775. தனதாதிபாய நம:

குபேரனின் அதிபதியே நமஸ்காரம்.

776. மஹாதனாய நம:

செல்வம் எனப்படுவதில் காசு, பணம் மட்டுமின்றி யசஸ், ஆயுள், புத்திர பௌத்திர தனம் மிகுந்தவரே நமஸ்காரம். Not only Material Riches. But Sipritual wealth. He is rich of the Richest.

777. மஹாமானினே நம:

அனைவராலும் போற்றிப் புகழப்படும் புருஷோத்தமனே நமஸ்காரம்.

778. துர்யோதன விமானனாய நம:

எதிரிகளும் அஞ்சிவணங்கும் துரியோதனனுக்கும் துணை போனவர் அவருக்கு நமஸ்காரம்.

779. ரத்னாகராய நம:

நவரத்தின கடலில் மூழ்கியவர். ஸ்ரீகிருஷ்ணருக்கு நமஸ்காரம்.

780. ரத்ன ஸேவினே நம:

ஆதிசேஷனால் ரத்தினங்களைக் கொண்டு அர்ச்சனை செய்யப்பட்ட அனந்த நாராயணனே நமஸ்காரம்.

781. ரத்ன கர்ப்ப தராய நம:

ரத்னங்களின் இருப்பிடமே நமஸ்காரம்.

782. ஸுச்சயே நம:

தோஷமில்லாதவரே நமஸ்காரம்.

783. ரத்னஸானு நிதயே நம:

ரத்ன பொக்கிஷங்களின் இருப்பிடமானவரே நமஸ்காரம்.

784. மௌலி ரத்ன பாஸே நம:

ரத்னங்கள் பதித்த ஜொலிக்கும் மகுடபதியே நமஸ்காரம்.

785. ரத்னகங்கணாய நம:

ரத்தின கங்கணம் அணிந்தவரே நமஸ்காரம்

786. அந்தர் லக்ஷ்யாய நம:

பக்தனின் ஹ்ருதயாகாசத்தினை பார்க்கும் சக்திபடைத்தவரே நமஸ்காரம்.

787. அந்தரத்யானினே நம:

மனதை ஒருநிலைப்படுத்தி மூச்சை உள்ளடக்கி தியானத்தில் இருப்பவரே நமஸ்காரம்.

788. அந்தர்த்யேயாய நம:

ஆத்மார்த்தமாக நாம் தியானிக்க வேண்டியவரே நமஸ்காரம். ராம் ராமாய நம: க்லீம் கிருஷ்ணா நம: ஓம் ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெய ராம். ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரிஹரே என்பவை போன்ற தியானம்.

789. ஜிதாஸனாய நம:

சித்தி பெற்ற யோகாசன நிலையில் இருப்பவரே நமஸ்காரம். (குண்டலினி யோகி)

790. அந்தரங்க தயாவதே நம:

அந்தரங்க சுத்தியோடு பக்தனிடம் தயை காட்டும் தயாளனே நமஸ்காரம்.

791. அந்தர் மாயா மஹார்ணவாய நம:

மனதுக்குள் மாயா லோகத்தை உள்ளடக்கியுள்ள மாயாவியே நமஸ்காரம்.

792. ஸரஸீ ஸித்தி ரஸிகாய நம:

நதி தீரத்தில் பக்த சித்தர்களினால் செய்யப்படும் பூஜைகளை பக்தி அனுஷ்டானங்களை ரசிப்பவரே நமஸ்காரம்.

793. ஸித்தி ஸித்தாய நம:

ஸித்திகளனைத்தும் ஸித்தியான சிரஞ்சீவியே நமஸ்காரம்.

794. ஸதாகதயே நம:

சதா ஆசாரமெனப்படும் பக்தியின் ஹோம மந்த்ர வழிமுறையை விரும்புபவரே நமஸ்காரம்.

795. ஆயு:ப்ரதாய நம:

தீர்க்காயுளைத் தரும் தீனபந்துவே நமஸ்காரம்.

796. மஹாயுஷ்மதே நம:

அவரே சாஸ்வதம். அழிவற்ற தீர்க்கமானவரே நமஸ்காரம்.

797. அர்ச்சிஷ்மதே நம:

பரஞ்ஜோதியை உணர்ந்தவர்களின் அதிபதியான பேரொளியே நமஸ்காரம்.

798. ஓஷதீபதயே நம:

ஔஷதம், ஔஷத சாத்திரம், மூலிகா சாத்திரம் இவைகளின் அதிபதியே நமஸ்காரம். (அவரே தன்வந்திரி)

799. அஷ்ட ஸ்ரீயை நம:

அஷ்ட லக்ஷ்மியரும் கூடியவரே லக்ஷ்மீபதியே நமஸ்காரம்.

800. அஷ்ட போகேஷ்டாய நம:

அஷ்டலக்ஷ்மியரின் போகத்தால் இஷ்டமடைந்தவரே நமஸ்காரம்.

801. கருதாய நம:

அனைத்தின் சிகரமே நமஸ்காரம்.

802. அக்னி ஸமாய நம:

அக்னிக்கு சமமானவரே நமஸ்காரம்.

803. வ்ரதினே நம:

வ்ரதங்களில் முறைகளை வகுக்கும் பெருமானே நமஸ்காரம்.

804. அபடாய நம:

''கற்க கசடற கற்க கற்றபின் நிற்க அதற்கு தக'' என்ற நிலையில் கற்று முடித்து கல்வியாக மாறியிருக்கும் கருணாமூர்த்தியே நமஸ்காரம்.

805. ஸுவர்ணாபாய நம:

சொர்ணமயமானவரே நமஸ்காரம்.

806. அஷ்டமூர்த்தயே நம:

சூர்யன் சந்திரன், பஞ்சபூதங்கள், எஜமானன் ஆகிய எட்டு சொரூபங்களில் பிரத்யட்சமாக இருப்பவரே நமஸ்காரம்.

807. த்ரிமூர்த்திமதே நம:

பிரும்ம விஷ்ணு சிவமென்ற மும்மூர்த்தி சொரூபமே நமஸ்காரம்.

808. அஸ்வப்னாய நம:

சொப்பன அவதியில்லாதவரே நமஸ்காரம். (தூங்கினால் தான் சொப்பனம் வரும். சதாசர்வகாலமும் விழித்த நிலையில் பக்தனை ரட்க்ஷிக்க நின்றபடியிருக்கும் வேங்கடப்பெருமாளுக்கு எப்படி கனவு வரும்)

809. ஸ்வப்னாய நம:

ஸ்வப்னமென்ற மாயையாக வருவதும் தெரிவதும் அவரே. மாய கண்ணனுக்கு நமஸ்காரம்.

810. ஸுஸ்வப்ன பலதாயகாய நம:

நல்ல சொப்பனங்கள் மூலம் நற்பலன்களை சூசகமாக சொல்லி பக்தனை பராமரிப்பவரே நமஸ்காரம்.

811. துஸ்ஸவப்ன த்வம்ஸகாய நம:

துர்சொப்பனங்களை தவிர்ப்பவரே நமஸ்காரம்.

812. த்வஸ்ததுர் நிமித்தாய நம:

(கெட்ட) துர்சகுனங்களை வராமல் தடுப்பவரே நமஸ்காரம்.

813. சிவங்கராய நம:

எப்போதும் மங்களகரமானதை செய்பவரே நமஸ்காரம்.

814. ஸ்வர்ண வர்ண ஸம்பாவ்யாய நம:

தங்கத்தை காணிக்கை பெறுவதில் நிறைவும் மகிழ்வும் பெறுபவரே நமஸ்காரம்.

815. வர்ணிதாய நம:

அனைவராலும் வர்ணிக்கப்படும் வாசுதேவனே நமஸ்காரம்.

816. வர்ணவன் முகாய நம:

வர்ணனைக்கேற்ற முகவிலாஸம் உடையவரே நமஸ்காரம்.

817. ஸ்வர்ணமுகரீதீர சிவத்யாத பதாம்புஜாய நம:

ஸ்வர்ணமுகி நதி தீரத்தில் பரமசிவனால் தனது தாமரைப் பாதங்களை தியானிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

818. தாக்ஷாயினீ வர்ணிதாங்காய நம:

தாக்ஷாயணியால் புகழ்ந்து பாடப்பட்ட அங்க சோபையை உடையவரே நமஸ்காரம்.

819. துர்வாஸோத்ருஷ்டி கோச்சராய நம:

துர்வாச மகரிஷியின் கண்களுக்கு தெளிவாகத் தென்பட்ட திருமலைவாசா நமஸ்காரம்.

820. அம்பரீஷ வ்ரத ப்ரீதாய நம:

அம்பரீஷனின் வ்ரதத்தில் திருப்தி பெற்றவரே நமஸ்காரம்.

821. மஹாகைடவ பஞ்ஜனாய நம:

கைடபன் எனும் மகா பலசாலியான அசுரனை வதம் செய்த கேசவா நமஸ்காரம்.

822. மஹாபிசாரிக த்வம்ஸினே நம:

மஹா அபச்சாரமாக கருதப்படும் துர்மந்திர வாமாச்சாரத்தை அதன் பிரயோகங்களை துவம்சம் செய்பவரே நமஸ்காரம். (சுதர்ஸன நரஸிம்ஹம் இதற்கு சான்றானவர்கள்)

823. காலசர்ப்ப பயாந்தகாய நம:

காலசர்ப்ப தோஷத்தை போக்கும் கலியுக கடவுளே நமஸ்காரம்.

824. ஸந்த்ருச்ய ஹேமாப்ஜ ஸரஸ்னாயினே நம:

தங்கத் தாமரைக் குளத்தில் நீராடும் திருமலைவாசா நமஸ்காரம்.

825. ஸ்ரீ மந்த்ர பாவிதாய நம:

ஸ்ரீ (லக்ஷ்மி) மந்திர பாவனையில் லயித்திருப்பவரே நமஸ்காரம்.

826. ஸ்ரீ ப்ரதத்தாம்புஜ ஸ்ரக்விணே நம:

ஸ்ரீ லக்ஷ்மி தேவி அணிவித்த தாமரை மலர் மாலையை தரித்திருப்பவரே நமஸ்காரம்.

827. ஸ்ரீ கேலயே நம:

ஸ்ரீலக்ஷ்மியுடன் கேளிக்கை செய்பவரே நமஸ்காரம்.

828. ஸ்ரீநிதயே நம:

லக்ஷ்மியின் இருப்பிடமானவரே நமஸ்காரம். (திருப்பதி தரிசனம் திவ்ய மங்களம்)

829. பவாய நம:

நடக்கப் போவதை முன் கூட்டி உணர்ந்து நிர்ணயிக்கும் பவனே நமஸ்காரம்.

830. ஸந்த்ருப்த தர்ப்பிதாய நம:

காணிக்கை அர்ப்பணிக்கப்படுவதை திருப்தியுடன் ஏற்றுக் கொள்ளும் திருப்பதி ஆண்டவனே நமஸ்காரம்.

831. தீர்த்தஸ் நாத ஸௌக்ய ப்ரதந்சகாய நம:

ஸ்ரீ வேங்கடாத்ரியான திருமலையிலுள்ள தீர்த்தங்களில் நீராடியவர்களை சுகஜீவிகளாக வாழ வைக்கும் சங்கல்பம் கொண்டுள்ள திருமலை வாசனே நமஸ்காரம்.

832. அகஸ்த்ய ஸ்துதி ஸம்ஹ்ருஷ்டாய நம:

அகத்தியரின் துதிகளால் மகிழ்ந்தவரே நமஸ்காரம்.

833. தர்ஸிதாவ்யக்த பாவனாய நம:

தரிசிப்போர் மனதில் நினைப்பது போல் நினைத்த உருவில் தரிசனம் தரும் மகா பிரபுவே நமஸ்காரம். வேங்கடரமணா சங்கட ஹரணா!

834. கபிலார்ச்சிஷே நம:

கபில மகரிஷியால் அர்ச்சிக்கப்பட்ட கருணாசாகரனே நமஸ்காரம்.

835. கபிலவா ஸுஸ்நாதாக விபாடனாய நம:

கபில தீர்த்தத்தில் நீராடியவர்களின் பிறவி, பாவ அழுக்கை உடனே போக்கும் பரந்தாமா நமஸ்காரம்.

836. வ்ருஷாகபயே நம:

வராஹ மூர்த்தி சொரூபமே நமஸ்காரம். (வ்ருஷ, தர்மம், காற்று, நீர், அபாக்... காப்பாற்றப்பட்டது)

837. கபிஸ்வாமினே நம:

காத்திலிருந்து அபாக் காத்ததால் கபி என்ற நாமம் வராகருக்கு வந்தது. வராக ஸ்வாமியே நமஸ்காரம். ஏழுமலையானை வணங்கும் முன் வராகரை வணங்குதலும் திருமலையானை பாராயணம், நாமாவளி சொல்லி வழிபட்டு துதிக்குமுன் வராஹ ஸ்லோகம் சொல்வதும் முறையாகக் கருதப்படுகிறது.

838. மனோன்த: ஸ்திதவிக்ரகாய நம:

மனதை விட்டகலாத ஸ்திரவிக்ரக சொரூபியே நமஸ்காரம். மனம் விட்டு பிரியாத மலையப்பன்.

839. வன்ஹிப்ரியாய நம:

பெருமாளுக்குப் பிடித்த தேவதை அக்னி பகவான். (அக்னி ஹவ்யவாஹனன்) அவருக்கு நமஸ்காரம்.

840. ஊர்த்வ ஸங்கிஸ்ரியேய் நம:

ஊர்த்வ ரேதஸ் நேராகச் சென்று ஸஹஸ்ராரத்துடன் கலக்கும் தன்மை கொண்டவரே நமஸ்காரம்.

841. ஜனலோக விதாயகாய நம:

பூ: புவ:, ஸுவ:, மஹ: ஆகிய லோகங்களுக்கு மட்டும் அதிபதியல்ல, ஜனலோகமும் அவர் ஆதிக்கமே, அந்த ஜனார்த்தனனுக்கு நமஸ்காரம்.

842. வஹ்னி ப்ரபாய நம:

அக்னியை பிரபையாகக் கொண்டவரே நமஸ்காரம். (Fire as his halo he has)

843. வஹ்னி தேஜஸே நம:

அக்னியை முக தேஜஸாக (காந்தியாக) கொண்ட ஏழுமலையானே நமஸ்காரம்.

844. ஸுபாபீஷ்ட ப்ரதாய நம:

நன்மையை பலனாகத் தரக்கூடிய சுபமான கோரிக்கைகளை பிரார்த்தனைகளை நிறைவேற்றும் திருப்பதி மலைவாசா நமஸ்காரம்.

845. யாமினே நம:

பக்தர்களின் லோக, யோக க்ஷேமத்தின் பொருட்டு சென்று கொண்டேயிருக்கும் ஸ்ரீனிவாசா நமஸ்காரம்.

846. வாருண க்ஷேத்ர நிலயாய நம:

வருணனால் பூஜிக்கப்பட்டு தர்ம க்ஷேமத்தை பொழிந்து கொண்டு வருணாலயமாக இருக்கும் பக்தஜனப்ரவாகமே நமஸ்காரம்.

847. வருணாய நம:

லோகத்திற்கு மழையாகவும் பக்தர்கட்கு க்ஷேமலாப சௌக்யமாகவும் மழை போல் சுகங்களைப் பொழிவதால் வருணனாகப் போற்றப்படுபவரே நமஸ்காரம்.

848. வருணார்ச்சிதாய நம:

வருணனால் வழிபட்டவரே நமஸ்காரம்.

849. வாயவே நம:

வாயு பகவானும் பெருமாள்தான். அவருக்கு நமஸ்காரம்.

850. வாயுக்ருத ஸ்தானாய நம:

வாயுபகவானால் உருவாக்கப்பட்ட வேங்கடாத்ரியில் இருக்கும் வேங்கடனே நமஸ்காரம். என் கடன் பணிசெய்வதே வேங்கடன் துணையிருக்கட்டும்.

851. வாயுகாய நம:

வாயுரூபமாக வாயு மூலமாக வாயு வேகமாக எங்கும் நுழைந்து வெளியேறக் கூடியவரே நமஸ்காரம். நிவாசனே உயிர் ஸ்வாசம். பேச்சு அவன் மூச்சு. மூச்சு அவன் பேச்சு.

852. வாயு ஸம்ப்ருதாய நம:

வாயுவால் அலங்கரிக்கப்பட்டவர். ஆழிசூழ் அரங்கன்... வாயு சூழ் வாஸுதேவன்.

853. யமாந்தகாபி ஜனனாய நம:

யமாந்தகனான சிவனைப் பூரணமாக அவர் பெருமைகளை புரிந்து கொண்ட யாதவ மாதவனே நமஸ்காரம்.

854. யமலோக நிவாரணாய நம:

தன் பக்தர்களை யம பயம், யமலோக பயம், நரகானுபவ பயங்களிலிருந்து ரக்ஷிக்கும் ஜகத்ரட்க்ஷகனே நமஸ்காரம்.

855. நியமினாம் அக்ரகண்யாய நம:

எது, எப்படி, எங்கு, எவரால், எதன் மூலம், எதற்காக நடக்க வேண்டுமென்ற நியமங்களை நியமிக்கும் முதல்வரே நமஸ்காரம்.

856. ஸம்யமினே நம:

பக்தனுடன் இருந்து நல்வழியில் கூட்டிச் செல்பவரே நமஸ்காரம்.

857. யம பாவிதாய நம:

யமன் உயிரை மனிதனிடமிருந்து கவர்வது போல பக்தனிடமிருந்து தீமையை கவர்ந்து ஜீவாத்மாவை புனிதப்படுத்தும் அச்சுதனே நமஸ்காரம். (யம பாவனையில் செயல்படுகிறார் பெருமாள்)

858. இந்த்ரோத்யான ஸமீபஸ்தாய நம:

இந்திரனுடைய தோட்டத்தினருகில் இருப்பவர் என பொருள் கூறுவர். ஆனால் உட்பொருளாவது -இந்திரியங்களெனப்படும் புலன்கள் ஐந்து. ஐம்புலன்களின் உணர்வுக்கு அவைகளின் உண்மையான உணர்வு கலந்த பக்திக்கு மிக அருகில் இருப்பவர் வேங்கட நாதன். அவருக்கு பாதந்தொட்டு நமஸ்காரம்.

859. இந்திர த்ரிக் விஷயாய நம:

(அந்த போன ஸ்லோகத்தின் பொருளில் சொன்ன) இந்தியங்களான ஐம் புலன்களும் உணரும் பொருளாக புலப்படும் பொருளாக இருக்கிறார். பரந்தாமனுக்கு நமஸ்காரம்.

860. ப்ருதவ நம:

ப்ருத்வி சொரூபியே நமஸ்காரம். (ப்ருத்வி என்றால் பூமி, புவி)

861. பக்ஷிராஜே நம:

கருடபகவானாகிய பட்சிராஜாவே நமஸ்காரம்.

862. ஸரஸீவாஸாய நம:

நதி நீரவாசனே நமஸ்காரம்.

863. அக்ஷயாய நம:

அள்ளக்குறையாத, கொடுக்கக் கொடுக்க கூடிவரும் அருளைத் தரும் அனந்தா... அட்சயபாத்ரமே நமஸ்காரம்.

864. விதிலோக க்ருதே நம:

ஸத்ய லோகமான விதி உலகை படைத்தவரே நமஸ்காரம்.

865. ஸ்வாமி தீர்த்த க்ருதாவாஸாய நம:

திருமலை திருப்பதியில் ஸ்வாமி தீர்த்தத்தை தனது இருப்பிடமாக செய்து கொண்டவரே நமஸ்காரம்.

866. ஸ்வாமி த்யேயாய நம:

எப்போதும் வராஹ ஸ்வாமியை த்யானம் செய்பவரே நமஸ்காரம்.

867. அதோக்ஷஜாய நம:

காலடியிலிருக்கும் பக்தர்களை காண கீழ்நோக்கிய பார்வையுடையவரே நமஸ்காரம்.

868. வராஹாபீஷ்ட தீர்த்தாபி ஸேவிதாங்கிரி ஸரோருஹாய நம:

வராகருக்கு பிடித்தமான தீர்த்த ஸாகரமான வராக தீர்த்தத்தில் ஸேவித்து அதன் துவக்கமாக மற்ற தீர்த்தங்களில் ஸேவித்த பெருமாளே நமஸ்காரம்.

குறிப்பு: திருப்பதி திருமலையில் 66 கோடி தீர்த்தங்கள் வியாபித்து உள்ளது. அவற்றில் பிரதானமானவை சுவாமி புஷ்கரணி, தும்புரு தீர்த்தம், நாரத தீர்த்தம், ஆகாய கங்கை, பாபநாச தீர்த்தம், கிருஷ்ண, சக்கர, சப்தரிஷி, பாண்டவ, கபில, தொட்டி, குமாரதாரை, விஷ்வக்ஸேன, பஞ்சாயுத, இந்திர, அக்னி, பிரம்ம, கோகர்ப்ப என்ற பதினெட்டு தீர்த்தங்கள். ஆதாரம்: வேங்கடேசப் பராக்கிரமம்.

ஒவ்வொரு ஆண்டும் மாசி மாத பௌர்ணமி திதியில் அறுபத்தி ஆறு கோடி தீர்த்தங்களும் ஸ்வாமி தீர்த்தத்தில் சங்கமமாவதாக பிரம்மாண்ட புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அதனால்தான் வராகருக்கு பிடித்தமான தீர்த்த ஸேவையை திருமலைவாசன் செய்தார் என கூறப்படுகின்றது.

கலியுகத்தில் அடுத்த திருப்பதியாக வையாவூர் (வேடந்தாங்கல் சமீபம் மதுராந்தகம் அருகே) பெருமாள் திகழ்வார் என சோதிட சாத்திரம் கூறுகிறது.

869. பாண்டு தீர்த்தாபிக்ஷித்தாய நம:

பாண்டவ தீர்த்தத்தில் அபிஷேகம் செய்யப்பட்ட பரம்பொருளே நமஸ்காரம்.

870. யுதிஷ்ட்ர வரப்ரதாய நம:

யுதிஷ்டரருக்கு வரதானம் செய்தவரே நமஸ்காரம்.

871. பீமாந்த கரணாரூடாய நம:

பீமசேனனின் இதயத்தினுள் இருப்பவரே நமஸ்காரம்.

872. ஸ்வேதாவா வாஹன ஸக்யவதே நம:

அர்ஜுனனின் தோழனே நமஸ்காரம்.

873. நகுலா பயதாய நம:

நகுலனுக்கு அபயப்ரதானமளித்த பகவானே நமஸ்காரம்.

874. மாத்ரீ ஸஹதேவாபி வந்திதாய நம:

மாத்ரீயின் புதல்வன் ஸஹதேவனால் வணக்கம் செலுத்தப்பட்டவரே நமஸ்காரம்.

875. கிருஷ்ண சபத ஸந்தாத்ரே நம:

கண்ணன் உபதேசித்த பேருரையின் உயர்ந்த தத்துவமே நமஸ்காரம். ஸ்ரீகிருஷ்ணனாக செய்த சபதத்தை நிறைவேற்றிய பெருமாள் எனவும் கொள்ளலாம்.

876. குந்தி ஸ்துதிரதாய நம:

குந்திதேவியின் பிரார்த்தனையை ஏற்ற குருதேவனே நமஸ்காரம்.

877. தமினே நம:

மன்னிக்கும் மனங்கொண்ட மாலே மணிவண்ணா நமஸ்காரம்.

878. நாரதீய மஹாதீர்த்த நித்யகர்ம பராயணாய நம:

தன் நித்யானுஷ்டானங்களை நாரத மஹாதீர்த்தத்தில் செய்யும் நித்யானந்தமே நமஸ்காரம்.

879. தர்சிதாவ்யக்த ரூபாய நம:

பக்தர்கள் பலருக்கு பிரத்யட்சமாக காட்சியும் தரிசனமும் தந்த பெருமாளே நமஸ்காரம்.

880. வீணாகான ப்ரமோதிதாய நம:

வீணாகானத்தில் மெய் மறந்து ரசிப்பவரே நமஸ்காரம். (கிருஷ்ணா வேணுகான பிரியர். பெருமாள் வீணை கானப்பிரியர்)

881. ஷட்கோடி தீர்த்தச்சர்யாவதே நம:

திருமலையின் ஆறுகோடி தீர்த்தங்களையும் ஸேவித்த பெருமாளே நமஸ்காரம்.

882. தேவதீர்த்த க்ருதாஸ்ரமாய நம:

தேவதீர்த்தகரையில் ஆஸ்ரமம் அமைத்து இருந்தவரே நமஸ்காரம்.

883. பில்வாமல ஜலஸ்னானினே நம:

பில்வ தீர்த்தத்தின் ஸ்படிகம் போன்ற தூய ஜலத்தில் ஸ்நானம் செய்தவரே நமஸ்காரம்.

884. சரஸ்வத்யும்பு சோபிதாய நம:

தான் நீராடியதன் பலனாக சரஸ்வதீ தீர்த்தத்தை சோபிக்கச் செய்து முக்கியமாக்கிய திருமாலே நமஸ்காரம்.

885. தும்புருதகஸம் ஸபர்சிஜன சித்த தமோப ஹாய நம:

தும்புருதீர்த்தத்தில் (ஸ்பர்சித்த) ஸ்நானம் செய்த மாத்திரத்தில் பக்தர்களின் மனோ விகாரம், மனஇருளைப் போக்கும் திருமலைவாசா நமஸ்காரம்.

886. மத்ஸய வாமன கூர்மாதி தீர்த்தராஜ பராகப்ருதே நம:

மத்ஸய தீர்த்தம், வாமன தீர்த்தம், கூர்மாதி தீர்த்தம் முதலிய தீர்த்த ராஜங்களால் புனித நீரில் குளித்த பக்தர்களை ராகத்துவேஷம் நீக்குவார். பிறவிப்பிணி, கர்மவினை, ஊழ்வினை, விதிப்பயன் அனைத்தும் போக்கி 'ஸ்ரீ'லக்ஷ்மி கடாட்சம் தரும் ஸ்ரீபதிக்கு நமஸ்காரம். (ராகத்துவேஷம் = Sensory Sin)

887. சக்ரத்யேய பதாம் போஜாய நம:

தனது தாமரைப் பாதங்களை சதாசர்வ காலமும் சக்கரத்தாழ்வார் போற்றிப் பணியும் பத்மநாபனே நமஸ்காரம்.

888. சங்க பூஜித பாதுகாய நம:

சங்கநாதனால் பூஜிக்கப்பட்ட பாதுகை தரித்த பரந்தாமனே நமஸ்காரம்.

889. ராம தீர்த்த விஹாரிணே நம:

ராமதீர்த்த வாசம் செய்தவரே நமஸ்காரம்.

890. பலபத்ர ப்ரதிஷ்டி தாய நம:

பலராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பாரிஜாதனே நமஸ்காரம்.

891. ஜமதக்னி ஸரித் தீர்த்த ஜலஸேச்சன தர்ப்பிதாய நம:

ஜமதக்னி தீர்த்தத்தில் ஜலத்தால் அர்க்கியம் பெற்று திருப்தியடைந்த பெருமாளே நமஸ்காரம்.

892. பாபாபஹாரி கீலால ஸுஸ்னாதாக வினாசநாய நம:

பாபவிநாச தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வோரின் பாவ கஷ்டங்களை போக்குபவரே நமஸ்காரம்.

893. நபோ கங்காபிஷிக்தாய நம:

ஆகாய கங்கை தீர்த்தத்தால் அபிஷேகம் செய்யப்பட்டவரே நமஸ்காரம்.

894 நாகதீர்த்தாபிஷேகவதே நம:

நாக தீர்த்த ஸ்நானம் செய்தவரே நமஸ்காரம்.

895. குமார தாரா தீர்த்தஸ்தாய நம:

குமாரதாரா தீர்த்தத்தில் வசித்த குபேரபிரபுவே நமஸ்காரம்.

896. வடுவேஷாய நம:

பிரம்மச்சர்ய கோலம் கொண்டவரே நமஸ்காரம்.

897. ஸுமேகலினே நம:

சுபத்தையே மேகலையாக அணிந்தவரே நமஸ்காரம். மங்களகரம் அவரது ஒட்டியாணம். (அரைஞாண் என்றும் குறிப்பிடுவர்)

898. விருத்தஸ்ய சௌகுமாரயத்வ ப்ரதாய நம:

தள்ளாத கிழவரை இளமை தந்த வரப்பிராதியே நமஸ்காரம்.

899. ஸௌந்தர்யவதே நம:

அழகே அழகின் அழகே அழகிய நம்பியே நமஸ்காரம்.

900. சுகினே நம:

சுகத்தின் திருஉருவே போகத்தின் பொருளே. சுகத்தின் சுகமே. சுகபிரம்மமே நமஸ்காரம்.

901. ப்ரியம் வதாய நம:

சுவைபடச் சொல்பவரே நமஸ்காரம். கீதோபதேசம் செய்தவர் கிருஷ்ணர். ஹிதோபதேசம் செய்பவர் பெருமாள். வாக்கினிலே இனிமையுண்டு வாசுதேவனுக்கு. காற்றினிலே கீதமுண்டு கண்ணனுக்கு.

902. மஹாகுக்ஷயே நம:

பெரும் வயிறு படைத்த ஹிரண்யகர்பனே நமஸ்காரம். மண்ணைத் தின்ற கண்ணன் கட்டிவந்த பிள்ளை. வெண்ணை தின்ற கோபாலன் அஜீர்ணம் வந்த பிள்ளை. பூவுலகை கர்ப்பத்தில் கொண்ட திருமால். வைணவத்தின் செல்லப்பிள்ளை. பூகர்பவாசனே நமஸ்காரம். (குக்ஷி-வயிறு)

903. இக்ஷ்வாகு கமனாய நம:

இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்ததால் அந்த குலம் விளங்க வைத்தவரே நமஸ்காரம்.

904. அமஹதே நம:

பக்தர்களின் பக்தனாக (தன் பாவனையில்) சகஜமானவராக விளங்கும் சாமான்யரே நமஸ்காரம். (அவரது லீலைகளில் காணலாம். கோராகும்பருக்கு பானை செய்ய உதவும் எளியவனாக வந்தார் பண்டரீநாதன் பாண்டுரங்கன்)

905. நீலகோக்ஷீர தாராபுவே நம:

ஸ்ரீனிவாசர் அவதாரத்தில் காராம்பசுவின் பாலை குடித்து அந்த பால் புவனமானது. (பரமாத்மா தன் பழைய நிலை பெற தவமிருந்த போது பரமசிவனே தெய்வீக பசுவாக வந்து பாலை பொழிந்து பருக வைத்தாராம்.)

(பாற்கடலில் பள்ளி கொண்டவன். பரமனிடம் பால் குடித்தவன். சிவனோ தான் விஷமருந்தி மைத்துனருக்கு அமுதமளித்து பசுவாக வந்து பாலும் கொடுத்தார். தாயுமானவனல்லவா. தயை செய்கிறார்.)

906. வராஹாச்சல நாயகாய நம:

வராஹகிரியின் அதிபதியே நமஸ்காரம்.

907. பரத்வாஜ ப்ரதிஷ்டாத்ரே நம:

பரத்வாஜ மகரிஷியால் பிரதிஷ்டை செய்யப்பட்டவரே நமஸ்காரம்.

908. ப்ருஹஸ்பதி விபாவிதாய நம:

தேவர்களின் தலைவர் பிரஹஸ்பதியால் போற்றி துதிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

909. அஞ்ஜனாக்ருத பூஜாவதே நம:

அஞ்ஜனாதேவியால் ஆராதிக்கப்பட்ட ஆண்டவனே நமஸ்காரம்.

910. ஆஞ்ஜனேய கரார்ச்சிதாய நம:

ஆஞ்ஜநேயரின் பக்திக்கரங்களால் மலர்தூவி அர்ச்சிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

'அனுமன் ராம தூதன், கண்ணன் பாண்டவ தூதன், அனுமன் வாயு புத்ரன், பெருமாள் வாயு சூழ்ந்தவர். அனுமன் ராமனுக்கு தாஸனாக கிருஷ்ணனுக்கு கொடியின் சின்னமாக பெருமாளுக்கு சேவார்த்தியாக இருந்தவர்.

911. அஞ்ஜனாத்ரி நிவாஸாய நம:

அஞ்ஜனாத்ரியில் வாசம்புரிபவரே நமஸ்காரம். (அஞ்ஜனாதேவி மாதவனை வேண்டி மாதவம் செய்த ஆஞ்சநேயரை பெற்றதால் அது அஞ்சனாத்ரி என்ற அஞ்சனாகிரியானது)

912. முஞ்ஜ கேசாய நம:

அவிழ்ந்த கேசத்தைக் கொண்ட கேசவனே மாதவன். அவருக்கு நமஸ்காரம்.

913. புரந்தராய நம:

புரந்தரனே நமஸ்காரம்.

இந்திரனும் அவர்தான். புரந்தரனும் அவர்தான். சுந்திரனும் அவர்தான். மந்திரனும் அவர்தான். தந்திரனும் அவர்தான். சந்திரனும் அவர்தான். சுதந்திரனும் அவர்தான். நிரந்தரனும் அவர்தான். புரந்தரனே நிரந்தரன். அதுவே திருப்பதி மலைவாழும் ஸ்ரீவேங்கடேசன்.

914. கின்னர, த்வய, ஸம்பந்த, பந்த, மோக்ஷ ப்ரதாய நம:

கட்டுண்டு ஒன்றாகக் கிடந்த இரண்டு கின்னரர்களையும் சாப விமோசனம் செய்து பந்தமறுத்து மோட்சம் தந்த கருணாமூர்த்தியே நமஸ்காரம்.

915. முனயே நம:

முனிஸ்ரேஷ்டரே நமஸ்காரம்.

916. வைகான: ஸாமகாரம்பாயே நம:

மகாவிஷ்ணுவின் பூஜா முறையில் பஞ்சராத்ரம், வைகானஸம் என இரு பிரிவுகளுண்டு. அதில் ''வைகானஸமே'' திருப்பதி ஸ்ரீவேங்கடநாதனுக்கு செய்யும் முறை. அதை வகுத்த பெருமாளுக்கு நமஸ்காரம்.

917. சுகக்ஞேயாய நம:

சுகப்ரும்மத்தால் நன்கு அறியப்பட்ட பரப்ரும்மமே நமஸ்காரம்.

918. அவ்ருஷாய நம:

அதர்மத்தை அனுக்ரகம் தராது தடுக்கும் தர்மாத்மாவே நமஸ்காரம். வர்ஷிப்பது - பொழிவது, வர்ஷம் - மழை. பொழிவதால் வந்த காரணப் பெயர்.

919. பலினே நம:

பராக்ரமசாலியே நமஸ்காரம்.

920. த்வேஷிகாயப்ரபோத்ரே நம:

தன்னை வெறுப்பவர்களையும் தன் பக்தர்களையும் தன்னையும் தூஷித்து துவேஷிப்பவர்களையும் உடல் பொருள் ஆவி மூன்றையும் சின்னாபின்னமாக்கும் சம்ஹார மூர்த்தியும் அவரே. ஓம் நரஸிம்ஹாய நம:

921. க்ரீட நாச்சார ஸம்ப்ரமாய நம:

தனக்கு நடக்கும் நித்யப்படி அபிஷேக ஆராதனைகளிலும் இதர மந்திர யந்திர தந்திர நாமஸ்மரண பாராயண வழிமுறைகளிலும்

வகுக்கப்பட்ட இலக்கணம் வழுவாமல் குற்றங்குறையில்லாமல் ஆசார அனுஷ்டான அக்கறையுடைய வேத நாராயணனே நமஸ்காரம். (பிரதி வெள்ளிக்கிழமை பெருமாளின் அபிஷேக முறை குறைவின்றி சதுஷ்ஷஷ்டி உபசாரத்துடன் நடக்கிறது. இதர சேவைகளிலும் குறைவொன்றில்லை கோவிந்தனுக்கு)

922. ஸௌவர்ச்சலேய வின்யஸ்த ராஜ்யாய நம:

அவரது ஆதிபத்யமாகிய பூலோகமும் வைகுண்டமும் அவரது மகிமையால் சுபகரமான வர்ச்சஸோடு கூடியிருக்கிறது. வைகுண்டவாசனுக்கு நமஸ்காரம்.

923. நாராயணாய நம:

நாராயணரே நமஸ்காரம்.

924. ப்ரீயாய நம:

அனைவராலும் நேசிக்கப்படும் பாலாஜிக்கு நமஸ்காரம்.

925. துர்மேதோ பஞ்ஜகாய நம:

துர்குணம், துர்புத்தி, துராக்கிருத செயல்களை அழிக்கும் தூயவரே நமஸ்காரம்.

926. ப்ராக்ஞாய நம:

எல்லாம் அறிந்தவரே நமஸ்காரம்.

927. ப்ரம்மோத்ஸவ ரதாய நம:

தினமும் ப்ரம்மோத்ஸவ நிலையில் இருக்கும் திருமலை. தேரிலிருப்பார். திருமலையிலிருப்பார். ஓங்கி உலகளந்தவர் உத்ஸவத்தில் இருப்பார். தினமும் திருவிழாக்கோலம். அவரை நினையாத மனமுண்டோ. அவர் பெயரை சொல்லாத வாயுண்டோ. மறுபடி

பிறந்தால் அவர் தேர் வடமாக திருமலையில் பிறக்க வேண்டும். பாராயணப்பிரியர். வேத, நாம கோஷப் பிரியர். அதுவே ஸ்ரீவேங்கடநாதனின் தனிப்பெருமை... தனி மகிமை.

928. கவயே நம:

கவியரசர் பெருமாளுக்கு நமஸ்காரம்.

அத்தனை மங்களா சாஸனங்களும் அவர் பாட வைத்த, மனதிலே கற்பனை வடிவெடுத்து செய்ய வைத்தவை. அன்னம்மாச்சாரியாரின் கீர்த்தனமாக, தியாகையாவின் சங்கீர்த்தனமாக, ஆழ்வார்களின் அழகு தமிழ் பாடல்களாக, ஆண்டாளின் பரத்தை கூறும் திருப்பாவைகளாக அவரல்லவரோ கவிபாடுகின்றார். பிறந்தால் அவர் நாமாவளியாக பிறத்தல் வேண்டும். அல்லது அதைப்பாடும் நல்லோர் நாவாக, அவர் பெயரை நாக்கு சொல்லும் போது ஊறும் எச்சிலாக பிறக்க வேண்டும். கோவிந்தாய நம:

929. பத்ராஸுர சிரத்சேத்ரே நம:

பத்ராஸுரனின் தலையை கொய்தவரே நமஸ்காரம்.

930. பத்ர க்ஷேத்ரிணே நம:

சர்வ மங்களமும் தரும் திருமலை க்ஷேத்ரமாக விளங்குபவரே நமஸ்காரம்.

931. ஸுபத்ரவதே நம:

அண்டிவந்த பக்தருக்கும் வேண்டி வந்த பக்தர்கட்கும் சுபமங்களம் தருபவரே நமஸ்காரம். உபத்ரவம் நீக்கி ஸுபத்ரவம் தருவதற்கு. பஜ கோவிந்தம் என மூட மனமே.

932. ம்ருகயாக்ஷீண ஸன்ன ஹாய நம:

வேட்டைக்குச் சென்று திரும்பியதால் வெற்றுடம்போடு நிற்கிறார் வேங்கடநாதர். அவருக்கு நமஸ்காரம். (வால்மீகியும் அவரே ராமனும் அவரே ராமாயணமும் அவரே)

933. சங்கராஜன்ய துஷ்டிதாய நம:

சங்கநாத ஒலியில் சந்தோஷம் அடையும் பெருமாளே நமஸ்காரம்.

934. ஸ்தாணுஸ்தாய நம:

அசையாமல் அசைக்க முடியாமல் அசைவின்றி நிற்கும் விக்கிரக மூர்த்தியே நமஸ்காரம். கருணை புரிய காலங்காலமாக நிற்கிறாரே. கால் வலிக்காதா?

935. வைனதேயாந்தர் பாவிதாய நம:

மனதால் பெரிய திருவடியான கருட பகவானோடு ஒன்றியவரே நமஸ்காரம்.

936. அசரீரவதே நம:

சரீரத்தை நீக்கி அசரீரியாக பராமத்மாவாக திகழ்பவர். ஒலியான ஒளியான பரமாத்ம சொரூபமே நமஸ்காரம்.

937. போகீந்த்ர போக ஸம்ஸ்தானாய நம:

ஆதிசேஷன் மீது அனந்த சயனம் செய்பவரே நமஸ்காரம். படுப்பது நாகம். கொடுப்பது போகம். இருப்பது யோகம். வேஷமெடுப்பது மோகம்.

938. ப்ரஹ்மாதி கண ஸேவிதாய நம:

பிரம்மன் முதலான தேவ தேவதைகள் வணங்கும் முழுப் பொருளே நமஸ்காரம்.

939. சஹஸ்ரார்கச்சடா பாஸ்வத் விமானாந்த ஸ்திதாயே நம:

ஆயிரம் சூர்யர்கள் போல் பிரகாசிக்கும் விமானத்தில் (கோபுர) வீற்றிருக்கும் ஞானபுருஷரே நமஸ்காரம். விமானம் எனக் குறிப்பிட்டது திருமலை தங்க கோபுரத்தின் விமானம். (Tower Portion)எனக் கொள்க.

940. அக்ரண்யே நம:

எல்லா தேவ தேவதைகளுக்கும் முதன்மையானவரே நமஸ்காரம். (பிராணாயாமத்தின் பிரதிநிதி பெருமாள்)

941. விஷ்வக்ஸேன க்ருத ஸ்தோத்ராய நம:

விஷ்வக்ஸேனரின் தோத்திரங்களால் பூஜிக்கப்படும் விஸ்வரூபியே நமஸ்காரம்.

942. ஸநந்தன பரீவ்ருதாய நம:

ஸனந்தன ரிஷியும் இதர ரிஷிகளும் புடைசூழ வீற்றிருப்பவரே நமஸ்காரம்.

943. ஜான்னவ்யாதி நதிஸேவ்யாய நம:

ஜான்னவி எனப் பெயர் கொண்ட கங்கை மற்றும் புண்ணிய நதிகளால் ஸேவிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

944. ஸுரேசாத்யபி வந்திதாய நம:

இந்திராதி தேவர்களால் வணங்கப்பட்ட வேங்கடாஜலனே நமஸ்காரம்.

945. ஸுராங்கனா ந்ருத்ய பராய நம:

தேவலோக பெண்களின் நடனத்தை ரசிப்பவரே நமஸ்காரம்.

946. கந்தர்வோத்காயன ப்ரியாய நம:

கந்தர்வகானத்தில் பிரியமுடையவரே நமஸ்காரம்.

947. ராகேந்து ஸங்காஸ நகாய நம:

சூர்ய சந்திரர் போல ஜொலிக்கும் நகங்களை உடையவரே நமஸ்காரம்.

948. கோமலாங்ரி ஸரோருஹாய நம:

கோமள பாதமுடையவரே நமஸ்காரம். தாமரைப் பாதம் பணிவோம். காலைப் பிடித்தால் தலை குனிந்து நம்மை பார்த்திடுவார் ஏழுமலைவாசன்.

949. கச்சப ப்ரபதாய நம:

கூர்மத்தின் முதுகு போன்ற புறங்கால்களைக் கொண்டவரே நமஸ்காரம்.

950. கந்து குல்பகாய நம:

**Kandhu Gulphakaaya Namaha.**
திரண்ட குதிகால்களை உடையவரே நமஸ்காரம்.

951. ஸ்வச்ச கூர்ப்பகாய நம:

**Swachcha Koorppakaaya Namaha.** அழகிய புருவ மத்தியை உடையவரே நமஸ்காரம்.

952. மேதுர ஸ்வர்ணவஸ்த்ராட்ய கடிதேசாய நம:

புடம்போடப்பட்ட சொர்ண வஸ்திரத்தால் அலங்கரிக்கப்பட்ட இடுப்பு பிரதேசமுடையவரே நமஸ்காரம்.

953. ஸுமேகலாய நம:

அழகான ஒட்டியாணம் அணிந்தவரே நமஸ்காரம்.

954. ப்ரோல்லஸச்சுரிகா பாஸ்வத் கடி தேசாய நம:

சுடர்விட்டு பிரகாசிக்கும் இடுப்பு பிரதேசத்தையுடையவரே நமஸ்காரம்.

955. சுபங்கராய நம:

சுபத்தை தருபவரே நமஸ்காரம்.

956. அனந்த பத்மஜஸ்தான நாபயே நம:

அனேக தாமரை மலர்களின் இருப்பிடம் போன்ற நாபியை உடையவரே நமஸ்காரம்.

957. மௌக்திக மாலிகாய நம:

முத்துமாலை அணிந்தவரே நமஸ்காரம்.

958. மந்தார பஞ்சகாமாலினே நம:

மந்தாரம் முதலிய ஐந்து வகை புஷ்பங்களாலான மாலையை அணிந்தவரே நமஸ்காரம்.

959. ரத்னாபரண ஸம்ப்ருதாய நம:

ரத்தன ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரே நமஸ்காரம்.

960. ப்ரலம்பயக்ஞோபவீதாய நம:

(நீள) தண்ட யக்ஞோபவீதம் அணிந்தவரே நமஸ்காரம்.

961. சந்த்ர ஸ்ரீகண்ட லேபவதே நம:

அம்ருதமயமான ஸ்ரீசந்தனம் பூசியிருப்பவரே நமஸ்காரம். (பகவானின் வட்சஸ்தலம். லக்ஷ்மி சந்தனபிம்பமே)

962. வரதாய நம:

கேட்டதும் கொடுப்பவனே கிருஷ்ணா நமஸ்காரம்.

963. அபயதாய நம:

அபயப்ரதானியே நமஸ்காரம்.

964. சக்ரிணே நம:

ஸுதர்ஸன சக்ரதாரியே நமஸ்காரம்.

965. சங்கினே நம:

பாஞ்ச்ச ஜன்ய சங்கொலியே நமஸ்காரம். சங்கு கரத்திலிருப்பதால் பெருமாளும் சங்கரன்

966. கௌஸ்துப தீப்திமதே நம:

ஜொலிக்கும் கௌஸ்துப ஆபரணமணிந்தவரே நமஸ்காரம்.

967. ஸ்ரீவத்ஸாங்கித வக்ஷஸே நம:

மார்பில் ஸ்ரீவத்ஸம் மின்னும் பெருமாளே நமஸ்காரம்.

968. லக்ஷ்மீ ஸம்ப்ருத ஹ்ருத் தடாய நம:

ஹ்ருதய கமலத்தை லக்ஷ்மி அலங்கரிக்கும் லக்ஷ்மிபதியே நமஸ்காரம்.

969. நீலோத்பல நிபாகாராய நம:

நீலோத்பலம் போன்ற மேனியை உடையவரே நமஸ்காரம்.

970. சோணாம்போஜஸமானனாய நம:

செந்தாமரை முகத்தோனே நமஸ்காரம்.

971. கோடி மன்மத லாவண்யாய நம:

கோடி மன்மதர்களின் முகலாவண்யம் ஒன்று கூடிய பேரழகே நமஸ்காரம்.

972. சந்த்ரிகாஸ்மித பூரகாய நம:

சந்திரகாந்திக்கிணையான புன்சிரிப்புடையவரே நமஸ்காரம்.

973. ஸுதாஸ்வரத் வச: சாலினே நம:

அம்ருதம் போன்ற வார்த்தைகளை உதிர்ப்பவரே நமஸ்காரம். (கீதை சொன்னாரே.. அதிலுள்ள அத்தனை வார்த்தைகளும் அம்ருதம் போன்றவையே)

978. கஸ்தூரி திலகாங்கிதாய நம:

கஸ்தூரி திலகமிட்டவரே நமஸ்காரம்.

979. புண்டரீகேக்ஷணாய நம:

கண்களிரண்டும் மலர்ந்த தாமரை போன்றவை. பெருமாளே நமஸ்காரம்.

980. ஸ்வச்ச மௌலிசோபா விராஜிதாய நம:

இயற்கையான எழில் கூடிய சிரோசோபையுடையவரே நமஸ்காரம்.

981. பத்மாஸ்தாய நம:

பத்மனபானே நமஸ்காரம். பத்மாசனத்திலிருப்பவரே பத்மரூபமே நமஸ்காரம்.

982. பத்மநாபாய நம:

தாமரை போன்ற நாபியை உடையவரே நமஸ்காரம்.

983. ஸோம மண்டலகாய நம:

சந்திர மண்டலத்தில் சந்திரனாக இருப்பவரே நமஸ்காரம்.

984. புதாய நம:

புதன் மண்டலத்தில் புதனாக இருப்பவரே நமஸ்காரம்.

985. வஹ்னி மண்டலகாய நம:

அக்னிமண்டலத்தில் அக்னியாக இருப்பவரே நமஸ்காரம்.

986. ஸூர்யாய நம:

சூரியனாக இருப்பவரே நமஸ்காரம்.

987. ஸூர்யமண்டலகாய நம:

ஸூர்ய மண்டலமும் அவரே. நமஸ்காரம்.

988. ப்ரபவே நம:

பிரபுவே நமஸ்காரம்.

989. ஸ்ரீபதயே நம:

லக்ஷ்மீ நாராயணனே நமஸ்காரம். லக்ஷ்மீபதியே சரணம்.

990. பார்க்கவீஜானயே நம:

கங்காதேவியின் சங்கமமே சரணம்.

991. விமலாத்யாதிஸம்வ்ருதாய நம:

விமலா போன்ற நதிகளால் சூழப்பட்டவர் அவருக்கு நமஸ்காரம்.

992. காமித ப்ரதாய நம:

பக்தன் இச்சிப்பதை பரமன் தருவான். பகவானே நமஸ்காரம். நினைத்ததை பெறுவதற்கு நீங்களே கண்கண்ட தெய்வம். மனித ஆசைகளை பூர்த்தி செய்ய மலைமீதிருக்கும் வேங்கடனே துணை. நினைத்ததை தருவான்.

993. அவஸ்தாத்ரய யந்த்ரே நம:

மனித அவஸ்தைகளாகிய தூக்கம், விழிப்பு, துரீயம் ஆகியவற்றை மாற்றும் யந்த்ர ஸ்தாபிதமே திருவேங்கடத்தான். திருவே சரணம்.

994. ரக்ஷகாய நம:

எங்களை ரட்சிக்கும் தெய்வமே நமஸ்காரம்.

995. ஜனித்ரே நம:

நமக்காக ஜனனமெடுத்தவரே நமஸ்காரம்.

996. ஜகத் குடும்பினே நம:

உலகமே அவர் குடும்பம். விஸ்வ தேஜஸ ரூபவதே நம: பூலோகத்தில் தேஜோ ரூபியாக பிரகாசிப்பவர். ஜ்ஞப்தயே நம: எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டியவர். புரிந்து கொள்ள வேண்டியவர்.

997. ஞேயாய நம:

அனைத்தும் தெரிந்தவர். அனைத்தும் புரிந்தவர். அனைத்தும் உணர்ந்தவர். அவர் ஒருவரே.

ஞான கம்யாய நம: ஞான வழியாகச் செல்பவர்.

ஞானதீதாய நம: அதீத ஞானமுடையவர்.

ஸுராதிகாய நம: தேவர்களால் போற்றப்படுபவர்.

கதாதராய நம: கதாயுதம் தரித்தவர்.

998. ப்ரம்மாண்டாந்தர் பஹிர் வ்யாப்தாய நம:

தான் உள்ளடக்கிய பிரம்மாண்டத்தை வெளிஉலக அண்டத்துக்கு காட்டுபவர்.

999. வேங்கடாத்ரயே நம:

திருவேங்கடத்தில் என்றும் எப்போதும் இருப்பவரே நமக்காக, நம்முடன், நம்மை எதிர்நோக்கியிருப்பவரே சாஷ்டாங்க நமஸ்காரம்.

1000. "ஸ்ரீ"நிவாஸாய நம:

லக்ஷ்மீயின் இருப்பிடமே நமஸ்காரம்.

ஸ்ரீ வேங்கடேஸாய நம:

ஸ்ரீ வேங்கடேஸ ஆயிரம் நாமாவளி.... "சுபம்" "மங்களம்". ஸ்ரீனிவாசாய மங்களம்.

குறிப்பு: சில ஸ்லோகங்கள் திரும்பத் திரும்ப இரண்டு தடவை மூன்று தடவை சில இடங்களில் வருகின்றது. அதை நீக்க நினைத்த போது நீக்கக் கூடாதெனவும் அதற்கு காரணமும் குறிப்பில் தெரிந்தது.

மங்களா சாஸனங்களிலும், இப்படி திரும்பத் திரும்ப வருமாம். காரணம் ஏற்றுக் கொள்ளக்கூடியதே.

பெருமாள் தோத்திரப்பிரியர் நாமாவளியில் மயங்குபவர். அவரது அழகை, பெருமைகளை, வர்ணித்தால் பிடிக்குமாம். அதை அடிப்படையாகக் கொண்டதே அடிக்கடி வரும் ஒரே வர்ணனைகள். இதில் 993 முதல் 1000 வரை எழுதும் போது என் மனதில் பெருமாளாக காட்சி தந்தவர் H.H. சிவசங்கரா அவர்கள். அங்கு வரும் ஸ்லோகங்களை அர்த்தமுணர்ந்து பார்த்தால் பிரேம சொருபியான H.H. சங்கராவின் தன்மை, செயல்கள், காருண்யம், அத்தனையும் ஒத்துப் போகின்றன. அவர்தான் இந்த சஹஸ்ரநாம பாராயணத்தின் மூலமென்பது உலகுக்குத்தெரிய அதிக நாட்களில்லை.

சர்வம் சிவசங்கரம்.

குருபிரம்மம் சிவசங்கரம்.

ஸ்ரீவேங்கடம் சிவசங்கரம்.

சிவசங்கர ஜென்மம்.

ஸ்ரீவேங்கடேசம்.

பரமாத்ம ஸ்வரூபம் சிவசங்கரம்.

பரமார்த்த, மந்த்ரார்த்த, தர்மார்த்த,

காம்யார்த்த, சித்தார்த்தம், சிவசங்கரம்

சிவசங்கரம் தர்ஸனம் புண்யம்.

ஸ்பர்ஸனம் பாப விமோசனம்.

பரிச்யம் மோக்ஷதாயகம்.

பாஷ்யம் வித்யா அபிவிருத்யர்த்தம்

பிரேமம் சொரூபம் சிவசங்கரம்.

பக்திம் விபூதிம்.

அனுகூலம் பிரசாதம்

சத்யம் சிவசங்கரம்

சர்வம் சிவசங்கரம்

சமஸ்தம் சிவசங்கரம்

சாஸ்வதம் சிவசங்கரம்

சாஸ்தா ரூபம் சிவசங்கரம்

பிரேமம் சிவசங்கரம்

சுப்ரம்மண்யம் சிவசங்கரம்

சிவசங்கரம்

ஹரிஹர சக்தி சங்கமம்

குரு சங்கரம், சிவசங்கரம்

பிறவி ஞானஒளி H.H. சிவசங்கரா அவர்கள் அருளாசியே இந்நூல்.

சிவசங்கர ஸ்துதி எனது நன்றிகலந்த பக்தி உணர்வின் பிரதிபலிப்பு.

எழுதுங்கள்... எழுதுங்கள்... எதையாவது எழுதுங்கள். ஆன்மாவின் பொருளை எழுதுங்கள். அதை அடையும் ஆன்மீக வழியை எழுதுங்கள். இறைவனை எழுதுங்கள் என்று எனது எழுத்து யாகத்தின் அக்னியாகயிருந்து ஹவிர்பாகத்தை ஏற்றவரும் H.H. சிவசங்கரா அவர்கள்தான். கடமையை இந்த கருவி செய்து விட்டது. அதன் பலனை அந்த பரம்பொருள் தரட்டும்.

H.H. சிவசங்கரா பிரேமசொரூபம். H.H. யோகி ராம் சுரத்குமார் ராமநாம சொரூபம்.

உ
ராம

கடவுளின் குழந்தை யோகி ராம் சுரத்குமார் அவர்கட்கு,

ஓம் ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெய ராம்

என்று ராம நாம ஞானாஞ்சலி செய்து வணங்குகிறேன்.

தெரிந்தோ, தெரியாமலோ, அறிந்தோ, அறியாமலோ, புரிந்தோ புரியாமலோ இந்நூலில் என்னால் ஏற்பட்ட குறையோ, பிழையோயிருப்பின் மன்னிக்க வேண்டி தாள்பணிகிறேன். தொகுக்கப்பட்ட, தொடுக்கப்பட்ட முன்னோர் சொன்ன இறையருள் ஸ்லோகங்கள். திருமாலின் பெருமை கோலத்தை வர்ணித்த ஆயிரம் நாமாவளியான இந்நூலில்

மகாவிஷ்ணுவின் துவாதச நாமாவளி அர்ச்சனை பூக்களாக வைப்பது புனிதக் கடமையாகும்.

1. ஓம் ஸ்ரீ ஹரியே நம:
2. ஓம் ஸ்ரீ கேஸவாய நம:
3. ஓம் ஸ்ரீ பத்மனாபாய நம:

4. ஓம் ஸ்ரீ வாமனாய நம:
5. ஓம் ஸ்ரீ வேதகர்பாய நம:
6. ஓம் ஸ்ரீ மதுசூதனாய நம:
7. ஓம் ஸ்ரீ வாஸுதேவாய நம:
8. ஓம் ஸ்ரீ வாராஹாய நம:
9. ஓம் ஸ்ரீ புண்டரீகாட்ஷாய நம:
10. ஓம் ஸ்ரீ ஜனார்த்தனாய நம:
11. ஓம் ஸ்ரீ கிருஷ்ணாய நம:
12. ஓம் ஸ்ரீதராய நம:

இந்த துவாதச நாமாவளி பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அருளியது.

திருவே திருவின் உருவே

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம்

ஸ்ரீ வேங்கடேஸாய மங்களம்

யோகிராம் சுரத்குமார் யோகிராம் சுரத்குமார்
யோகிராம் சுரத்குமார் ஜெய குருராயா.
ஹர சிவசங்கர சிவஹர சங்கர
ஹரிஹர சங்கர சிவசிவ சங்கரா பணி தொடரும்.

பணிவன்புடன் "இது"
வியட்நாம் வீடு சுந்தரம் V.

## பிரத்யோக நன்றி

ஸ்ரீ வேங்கடேச சஹஸ்ரநாமம் மூலம் எழுதிய பல முன்னோர்கள் பாஷ்யமெழுத கற்பனையில் துணையிருந்த பரந்தாமன், H.H. சிவசங்கரா... நூலை வெளியிடும் பதிப்பகத்தார் கூடவே இன்னொரு ஜீவன். பாரதிக்கும் எனக்கும் ஒரே ஒரு ஒற்றுமை.

இருவர் மனைவி பெயரும் செல்லம்மா, எழுத உதவி புரிந்த துணைவிக்கும் நன்றி.

பணிதொடர வாழ்த்துங்கள். படித்து விட்டு வாழ்த்துங்கள். கோடானு கோடி நன்றி.

சுகம் சுபிட்சம் லக்ஷ்மீகரம் ஸ்ரீனிவாஸம் மங்களம்.

# ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம்

1. கௌசல்யா ஸுப்ரஜா ராம
பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே |
உத்திஷ்ட நரசார்தூல
கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் ||

2. உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த
உத்திஷ்ட கருடத்வஜ |
உத்திஷ்ட கமலாகாந்த
த்ரைலோக்யம் மங்களம் குரு ||

3. மாதஸ்ஸமஸ்தஜகதாம் மதுகைட பாரே
வக்ஷோவிஹாரிணி மநோஹர திவ்யமூர்த்தே |
ஸ்ரீஸ்வாமிநி ச்ரிதஜந ப்ரியதாநசீலே
ஸ்ரீ வேங்கடேச தயிதே தவஸுப்ரபாதம் ||

4. தவஸுப்ர பாத மரவிந்தலோசநே
பவது ப்ரஸந்ந முகசந்த்ர மண்டலே |
விதி சங்கரேந்த்ர வநிதாபிரர்ச்சிதே
வ்ருஷசைலநாததயிதே தயாநிதே ||

5. அத்ரியாதி ஸப்தரிஷயஸ்ஸமுபாஸ்ய ஸந்த்யாம்
ஆகாசஸிந்து கமலாநி மநோஹராணி |
ஆதாய பாதயுக மர்ச்சயிதும் ப்ரபந்நா :
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் ||

6. பஞ்சாநநாப்ஜபவ ஷண்முகவாஸவாத்யா;
த்ரைவிக்ர மாதி சரிதம் விபுதாः ஸ்துவந்தி|
பாஷாபதி: படதி வாஸர சுத்தி மாராத்
சேஷாத்ரி சேகரவிபோ தவஸுப்ரபாதம்||

7. ஈஷத் ப்ரபுல்ல ஸரஸீருஹநாரிகேல
பூகத்ருமாதி ஸுமநோஹர பாலிகாநாம்|
ஆவாதி மந்தமநிலஸ் ஸஹதிவ்யகந்தைः
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் ||

8. உந்மீல்ய நேத்ரயுக முத்தம பஞ்சர ஸ்தாः
பாத்ராவசிஷ்ட கதலீபல பாயஸாநி |
புக்த்வா ஸலீல மத கேளி சுகாः படந்தி
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் |

9. தந்த்ரீ ப்ரகர்ஷ மதுர ஸ்வநயா விபஞ்ச்யா
காயத்யநந்த சரிதம் தவ நாரதோபி |
பாஷா ஸமக்ரமஸக்ருத்கர சாரரம்யம்
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் ||

10. ப்ருங்காவலீச மகரந்த ரஸாநுவித்த
ஜங்காரகீத நிநதைஸ் ஸஹ ஸேவநாய |
நிர்யாத்யுபாந்த ஸரஸீ கமலோதரேப்ய:
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் ||

11. யோஷா கணேந வரதத்நி விமத்யமாநே
கோஷாலயேஷு ததிமந்தந தீவ்ரகோஷம் |
ரோஷாத்கலிம் விததேதே ககுபஸ்சகும்பா:
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் ||

12. பத்மேசமித்ர சதபத்ர கதாலி வர்கா:
ஹர்த்தும் ச்ரியம் குவலயஸ்ய நிஜாங்கலக்ஷ்ம்யா:|
பேரீ நிநாத மிவ பிப்ரதி தீவ்ர நாதம்
சேஷாத்ரி சேகர விபோ தவஸுப்ரபாதம் ||

13. ஸ்ரீமந் நபீஷ்ட வர தாகில லோகபந்தோ
ஸ்ரீ ஸ்ரீநிவாச ஜகதேக தயைக ஸிந்தோ |
ஸ்ரீ தேவதா க்ருஹ புஜாந்தர திவ்யமூர்த்தே
ஸ்ரீ வேங்கடா சலபதே தவஸுப்ரபாதம் ||

14. ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணிகாப்லவ நிர்மலாங்கா:
ச்ரேயோர்த்தினோ ஹரவிரிஞ்ச ஸநந்தநாத்யா: |
த்வாரே வஸந்தி வரவேத்ர ஹதோத்தமாங்கா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

15. ஸ்ரீசேஷசைல கருடாசல வேங்கடாத்ரி
நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரிமுக்யாம் |
ஆக்யாம் த்வதீய வஸதேரநிசம் வதந்தி
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

16. ஸேவாபரா: சிவ ஸுரேச க்ருசாநுதர்ம
ரக்ஷாம்புநாத பவமாந தநாதி நாதா: |
பத்தாஞ்சலி ப்ரவிலஸந் நிஜசீர்ஷதேசா:
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

17. தாடீஷுதே விஹகராஜ ம்ருகாதி ராஜ
நாகாதிராஜ கஜராஜ ஹயாதி ராஜா: |
ஸ்வஸ்வாதிகார மஹிமாதிக மர்த்தயந்தே
ஸ்ரீ வேங்கடா சலபதே தவஸுப்ரபாதம் |

18. ஸூர்யேந்து பௌம புத வாக்பதி காவ்ய ஸௌரி
ஸ்வர்பாநு கேது திவிஷத் பரிஷத் ப்ரதாநா: |
த்வத் தாஸ தாஸ சரமாவதி தாஸ தாஸா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

19. த்வத் பாத தூளி பரித ஸ்புரிதோத்த மாங்கா:
ஸ்வர்காப வர்க நிரபேக்ஷ நிஜாந்தரங்கா: |
கல்பாகமாகல நயா ஆகுலதாம் லபந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

20. த்வத்கோபுராக்ர சிகராணி நிரீக்ஷமாண:
ஸ்வர்காபவர்க பதவீம் பரமாம் ச்ரயந்தி|
மர்த்யா மநுஷ்ய புவ்தே மதிமாச்ரயந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம்||

21. ஸ்ரீபூமி நாயக தயாதி குணாம்ருதாப்தே
தேவாதி தேவ ஜகதேக சரண்யமூர்த்தே |
ஸ்ரீ மந்நநந்த கருடாதிபிரர்ச்சி தாங்க்ரே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ர பா தம்||

22. ஸ்ரீபத்மநாப புருஷோத்தம வாஸுதேவ
வைகுண்ட மாதவ ஜநார்த்தந சக்ரபாணே|
ஸ்ரீ வத்ஸ சிஹ்நசரணாகத பாரிஜாத
ஸ்ரீவேங்கடா சலபதே தவஸுப்ரபாதம்||

23. கந்தர்ப்ப தர்ப்ப ஹரஸுந்தர திவ்யமூர்த்தே
காந்தா குசாம்புருஹ குட் மல லோல த்ருஷ்டே|
கல்யாண நிர்மல குணாகர திவ்யகீர்த்தே
ஸ்ரீவேங்கடா சலபதே தவஸுப்ரபாதம்||

24. மீநாக்ருதே கமட கோல ந்ருஸிஹ்ம வர்ணிந்
ஸ்வாமிந் பரச்வத தபோத ந ராமசந்த்ர|
சேஷாம்சராம யதுநந்தந கல்கிரூப
ஸ்ரீவெங்கடா சலபதே தவஸுப்ரபாதம்||

25. ஏலா லவங்க கநஸார ஸுகந்த தீர்த்தம்
திவ்யம் வியத் ஸரிதிஹேம கடேஷு பூர்ணம்|
த்ருத் வாத்ய வைதிக சிகாமணய: ப்ரஹ்ருஷ்டா:
திஷ்டந்தி வேங்கடபதே தவஸுப்ரபாதம்||

26. பாஸ்வாநுதேதி விகசாநி ஸரோருஹாணி
ஸம்பூரயந்தி நிநதை: ககுபோ விஹங்கா:|
ஸ்ரீவைஷ்ணவா :ஸதத மர்த்தித மங்களாஸ்தே
தாமாச்ரயந்தி தவ வேங்கடஸுப்ரபாதம்||

27. ப்ரஹ்மாதய ஸுரவராஸ்ஸமஹர்ஷயஸ்தே
ஸந்தஸ்ஸநந்தந முகாஸ்தவ யோகிவர்யா: |
தாமாந்திகே தவஹிமங்களவஸ்து ஹஸ்தா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

28. லக்ஷ்மீ நிவாஸ நிரவத்ய குணைகஸிந்தோ
ஸம்ஸார ஸாகர ஸமுத்தரணைகஸேதோ |
வேதாந்த வேத்ய நிஜவைபவ பக்தபோக்ய
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

29. இத்தம் வ்ருஷாசலபதே ரிஹ ஸுப்ரபாதம்
யே மாநவா: ப்ரதிதிநம் படிதும் ப்ரவ்ருத்தா: |
தேஷாம் ப்ரபாதஸமயே ஸ்ம்ருதிரங்கபாஜாம்
ப்ரஜ்ஞாம் பரார்த்த ஸுலபாம் பரமாம் ப்ரஸூதே ||

1. கமலாகுச சூசுக குங்குமதோ
நியதாருணிதாதுல நீலதநோ |
கமலாயதலோசந லோகபதே
விஜயீபவ வேங்கடசைலபதே ||

2. ஸசதுர்முக ஷண்முக பஞ்சமுக
ப்ரமுகாகில தைவத மௌலி மணே |
சரணாகத வத்ஸல ஸாரநிதே
பரிபாலய மாம் வ்ருஷசைலபதே ||

3. அதிவேலதயா தவ துர்விஷஹை:
அனுவேல க்ருதை ரபராதசதை: |
பரிதம் த்வரிதம் வ்ருஷ சைலபதே
பரயா க்ருபயா பரிபாஹி ஹரே ||

4. அதி வேங்கடசைலமுதாரமதேர்
ஜநதாபிமதாதிகதாநரதாத் |
பரதேவதயா கதிதாந் நிகமை:
கமலா தயிதாந் நபரம் கலயே ||

5. கலவேணு ரவாவச கோபவதூ
சதகோடி வ்ருதாத் ஸ்மரகோடி ஸமாத் |
ப்ரதிவல்லவி காபிமதாத் ஸுகதாத்
வஸுதேவ ஸுதாந் நபரம் கலயே ||

6. அபிராமகுணகர தாசரதே
ஜகதேகதநுர்தர தீரமதே |
ரகுநாயக ராம ரமே விபோ
வரதோபவ தேவ தயாஜலதே ||

7. அவநீ தநயா கமநீயகரம்
ரஜநீ கர சாரு முகாம்புருஹம் |
ரஜநீ சர ராஜ தமோ மிஹிரம்
மஹநீய மஹம் ரகுராம மயே ||

8. ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம்ஸுகதம்
ஸ்வநுஜஞ்ச ஸுகாய மமோகசரம் |
அபஹாய ரகூத்வஹ மந்ய மஹம்
நகதஞ்சந கஞ்சந ஜாது பஜே ||

9. விநா வேங்கடேசம் ந நாதோ ந நாத :
ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி |
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச ||

10. அஹம் தூர தஸ்தே பதாம்போஜயுக்ம
ப்ரணா மேச்சயாகத்ய ஸேவாம் கரோமி |
ஸக்ருத் ஸேவயா நித்ய ஸேவாபலம் த்வம்
ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ வேங்கடேச ||

11. அஜ்ஞாநிநா மயா தோஷா
நசேஷாந் விஹி தாந்ஹரே |
க்ஷமஸ்வத்வம் க்ஷமஸ்வத்வம்
சேஷசைல சிகாமணே ||

1. ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதேர்
விஷ்ணோ : பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ் ஸ்தல நித்ய வாஸ ரஸிகாம்
தத்க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் |
பத்மாலங்க்ருத பாணிபல்லவ யுகாம்
பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதி குணோஜ்ஜ்வலாம் பகவதீம்
வந்தே ஜகந் மாதரம் ||

2. ஸ்ரீமந் க்ருபாஜலநிதே க்ருதஸர்வலோக
ஸர்வஜ்ஞசக்த நதவத்ஸல ஸர்வசேஷிந்|
ஸ்வாமிந் ஸுசீல ஸுலபாச்ரித பாரிஜாத
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

3. ஆநூபுரார்ப்பித ஸுஜாத ஸுகந்தி புஷ்ப
ஸௌரப்ய ஸௌரப கரௌ ஸமஸந்நிவேசௌ |
ஸௌம்யௌ ஸதாநுபவநேபி நவாநு பாவ்யௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

4. ஸத்யோ விகாஸி ஸமுதித்வர ஸாந்த்ர ராக
ஸௌரப்யநிர்பர ஸரோருஹ ஸாம்ய வார்த்தாம் |
ஸம்யக்ஷு ஸாஹஸபதேஷு விலேகயந்தௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

5. ரேகாமய த்வஜ ஸுதா கலசாதபத்ர-
வஜ்ராங்குசாம் புருஹ கல்பக சங்க சக்ரை : |
பவ்யைரலங்க்ருத தலௌ பரதத்வ சிஹ்நை :
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

6. தாம்ரோதர த்யுதி பராஜித பத்மராகௌ
பாஹ்யைர் மஹோபிரபிபூத மஹேந்த்ர நீலௌ |
உத்யந் நகாம்சுபி ருதஸ்த சசாங்க பாஸௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

7. ஸப்ரேமபீதி கமலா கரபல்லவாப்யாம்
ஸம்வாஹநேபி ஸபதி க்லம மாததாநௌ |
காந்தாவ வாங்வநஸகோசர ஸௌகுமார்யௌ ||
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

8. லக்ஷ்மீ மஹீ ததநுரூப நிஜாநுபாவ
நீலாதி திவ்யமஹிஷீ கர பல்லவநாம் |
ஆருண்ய ஸங்க்ரமணத: கில ஸாந்த்ர ராகௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

9. நித்யாநமத் விதி சிவாதி கிரீடகோடி-
ப்ரத்யுப்த தீப்த நவரத்ந மஹ: ப்ரரோஹை: |
நீராஜநா விதிமுதார முபாததாநௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

10. விஷ்ணோ: பதேபரம இத்யுதிதப்ரசம்ஸௌ
யௌ மத்வ உத்ஸ இதி போக்யதயாப்பி பாத்தௌ
பூயஸ்த தேதி தவ பாணிதலப்ரதிஷ்டௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

11. பார்த்தாய தத்ஸத்ருச ஸாரதிநா த்வயைவ
யௌ தர்சிதௌ ஸ்வசரணௌ சரணம் வ்ரஜேதி |
பூயோபி மஹ்யமிஹ தௌ கரதர்சிதௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

12. மந்மூர்த்நி காலியபணே விகடாடவீஷு
ஸ்ரீ வேங்கடாத்ரி சிகரே சிரஸி ச்ருதீநாம் |
சித்தேப்யநந்ய மநஸாம் ஸமமாஹிதௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

13. அம்லாந ஹ்ருஷ்யதவநீ தல கீர்ண புஷ்பௌ
ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராபரணாயமாநௌ |
ஆநந்திதாகில மநோ நயநௌ தவைதௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||